# கல்கி

*ஸ்பீடா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...*



ஹீரோயின் கிடைச்சுட்டாங்க!

KALKI 18.05.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

"பிரதமர், அவர் வேலையைச் செய்கிறார். நாம் கட்சிப் பணி செய்வோம்!"

- ராகுல் காந்தி

# சுமக்க விரும்பாத பாரம்!

# ஹலோ வாசகர்களே...

தெரியுமா?
ஜூன் மாத கோகுலத்தை
நாங்களே தயாரிக்கிறோம்.

படைப்புகளை
செலக்ட் செய்து... எடிட் பண்ணி...
ரெடி பண்றோம்.

எல்லாமே நாங்கதான்.
'மிஸ்' பண்ணிடாம வாங்கிப்
பாருங்க. சரியா?

ஓவியத்துக்கு அனுப்பி...
நெட்ல ஃபோட்டோக்களைத்
தேடறோம்.

படம் : ஸ்ரீஹரி

● லலிதா செல்லப்பா, சென்னை

*வீடு வரை - வீதி வரை - காடு வரை - கடைசி வரை... எங்கே கிரேஸியாக உங்கள் பாணியில் சொல்லுங்கள் பார்க்கலாம்.*

வீடு வரை switch-off, வீதி வரை send-off, காடு வரை take-off, கடைசி வரை ON and OFF.. புனரபி ஜனனம் புனரபி மரணம்!

● ஏ.கே.நாசர், திருப்பட்டினம்

*புதுச் செருப்பு காலைக் கடிக்கும். புது மனைவி...?*

கையைக் கடிக்கும். செலவழிக்க நாம் யோசித்தால், நறநறவென பல்லைக் கடிக்கும். பழகப் பழக புதுச் செருப்பு பழசாகி கடிப்பதை நிறுத்திக்கொள்ளும். ஆனால், நம் கையைக் கடிப்பதில் நாம் கைப் பிடித்தவள் என்றுமே பழசாவதில்லை. அந்த பழகிய அழகிய ராட்சஸி, காலம் முழுவதும் கையைக் கடிக்கும் கால்கட்டு.

● ஜே.துரைராஜ், சென்னை

*வெற்றியின் ரகசியம் என்ன?*

தோல்வியின் அம்பலம். தோல்வியை ரகசியமாக வைத்துக்கொள்ளாமல் பகிரங்கமாக ஒப்புக்கொண்டு அம்பலப்படுத்துவதே நம் பலம்.

● சுமதி, விழுப்புரம்

*தற்கொலைக்குச் சமமான செயல் எது?*

விவாகரத்து. தற்கொலை, விவாகரத்து இரண்டுமே, தீர்வு காணக் கூடிய பிரச்னைகள், அவசரத்தில் எடுக்கப்படும் முடிவுகள்.

# கடி ஜோக்

*எடக்காடு பீ.சேகர், உதகமண்டலம்*

*கடி ஜோக் ஒன்று ப்ளீஸ்...?*

ஆசாமி : டாக்டர், குரைக்கற நாய் கடிக்காதுன்னு நினைச்சா, கடிச்சுடுத்து டாக்டர்.

டாக்டர் : எப்படிப்பா?



ஒவ்வொரு வாரமும் ஹ்யூமரைக் குரைக்காம மெய்ண்டேன் பண்ற ரகசியமென்னப்பா..?

ஆசாமி : கடிக்குதான்னு குரைக்கறப்போ, நாய் வாய்ல நாலு விரலை நுழைச்சுப் பாத்தேன்!

● அ.கஹ்ஹால் ரஹ்மான்

*'வாழ்த்துவதற்கு வயதில்லை' என்கிறார்களே ஏன்?*

சமீபத்தில் ஒரு குழந்தையின் முதல் ஆண்டு நிறைவு விழாவுக்குச் சென்றிருந்தேன். அங்கு வந்த மேடைப் பேச்சாளர் ஒருவர் மைக்கில் 'குழந்தையை வாழ்த்துவதற்கு வயதில்லை. எனவே வணங்கு

கிறேன்' என்று பழக்க தோஷத்தில் உளறி விட்டு, என் பக்கத்தில் வந்து அமர்ந்து, எப்படி என் வாழ்த்து என வெகுளியாகப் பார்த்தார். அவரது தவறைக் கூறி, தாழ்த்த எனக்கு வயதில்லையாதலால் சும்மா இருந்து விட்டேன்.

● ஷைலஜா, சென்னை

***ஐ.பி.எல். 20-20 கிரிக்கெட் யுத்தத்தைப் பார்த்தீர்களா? என்ன நினைக்கிறீர்கள்?***

பாண்டவர் அணியைச் சேர்ந்த அர்ஜுனன் கௌரவர்கள் அணியில் சேர்ந்து,

# ப்ளீஸ்..?

அவனுடைய தேரை ராமர் ஓட்டி, பாண்டவ அணியைச் சேர்ந்த ராவணனுக்கு கண்ணன் கீதோபதேசம் செய்து, பத்ம வியூகத்தில் நுழைந்த பரதனுக்கும் அபிமன்யுவுக்கும் சண்டை நடந்து, அதைப் பார்த்து மயக்கம் போட்டு விழுந்த சத்ருக்னனைக் காப்பாற்ற பீமன் சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கி வந்து, இறுதியில் பாஞ்சாலியின் கூந்தலை சீதை வாரிப் பின்னி முடிந்து, இப்படி ஒரு குழப்பமான குருக்ஷேத்திரத்தைப் பார்ப்பதுபோல் பிரமை உண்டாகிறது. ●



கிரேஸியைக் கேளுங்கள்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்கஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் :
044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.




## என் செல்ல தளபதி!

***'அம்மன் கோயில் எல்லாமே... எந்தன் அம்மா உந்தன் கோயிலம்மா! – உன் அன்புக்கெல்லை சொன்னாலே... அது எல்லையில்லா வானமம்மா!'***

1995ல் விஜய் நடிச்சு வெளிவந்த 'ராஜாவின் பார்வையிலே' படத்துல இந்தப் பாட்டு வருது. இளையராஜா சார் அற்புதமாக இசையமைச்சிருப்பார். விஜய்க்கும் இந்தப் பாட்டுக்கும் நெருங்கின தொடர்பு இருக்கு.

ரசிகர்களோட மனசைத் தன் சிறகால வருடுற 'குருவி', 'இளைய தளபதி', 'எதிர்கால சூப்பர் ஸ்டார்', 'டாக்டர்'.. இப்படி விஜய்யை என்னென்னமோ சொல்லிக் கூப்பிடறாங்க. ஆனா, இன்னைக்கும் விஜய் எனக்குக் குழந்தைதான். பல வருஷங்களுக்கு முன்னால, சென்னை எழும்பூர் மகப்பேறு மருத்துவமனைல அவசர அவசரமா பூமியைப் பாக்க வந்த அதே குழந்தை.

அந்த ஜூன் 22ஆம் தேதியை என்னால மறக்கவே முடியாது. இந்த உலகத்தையும் என்னையும் பாக்கற ஆசையில எட்டு மாசத்துலயே பிறந்துட்டான். பத்து நாளைக்கு இன்குபேட்டர்ல, கண்ணாடிப் பெட்டியில வச்சிருந்து, ட்ரீட்மெண்ட் பண்ணிட்டு அதுக்கப்புறமாத்தான் குழந்தையை என் கையில் குடுத்தாங்க. விரல் நடுங்க, விஜய்யைக் கையில் ஏந்தி, மனசெல்லம் கரைஞ்சு போய் அவனைக் கொஞ்சினது இன்னிக்கு நடந்த மாதிரித்தான் இருக்கு.

பொதுவா நம்ம நாட்டுல தாய்மார்கள், 'ராமர் மாதிரி பிள்ளை பிறக்கணும்'னு வேண்டிக்குவாங்க. எதுக்கு? ராமரைப் போலவே அவங்க பிள்ளையும் 14 வரு

**ஷோபா சந்திரசேகர்**

ஷம் காட்டுல போய்க் கஷ்டப்படறதுக் காகவா? இல்லை... பெத்தவங்க எது சொன்னாலும் மறுபேச்சுப் பேசாம செஞ் சவர் ராமர். அதுக்காக, நானும் அப் படித்தான் கடவுள்கிட்ட வேண்டிக்கிட் டேன்.

உசந்த நிலையில இருக்கற ஒரு ஞானி சொல்றார்: 'நீ உன் வாழ்க்கையில முன்னே றணும்னா, நினைச்சதை அடையணும்னா, தினமும் வீட்டைவிட்டு வெளியே போகும்போது உன் தாயின் காலைத் தொட்டு வணங்கிட்டுப் போ!' அவருக்குத் தாயின் மகத்துவம் தெரிஞ்சிருக்கு. அத னாலதான் அப்படிச் சொல்லியிருக் கார்.

சிவாஜி கணேசன் சார் வீடு கட்டி னப்போ 'அன்னை இல்லம்'னு பேர் வச்சார். அவர் நினைச்சிருந்தா தம் மனைவி பேரையோ, அல்லது வேற ஏதாவது பேரையோ வச்சிருக்கலாம். வைக்கலை. ஏன்? அவருக்கும் தாயின் சிறப்பு தெரிஞ்சி ருக்கு. என்னோட வீட்டுக்குக்கூட 'அன்னை இல்லம்'னுதான் பேர்.

'நீ உன் தாயை உயர்த்தினால் நான் உன்னை உயர்த்துவேன்' அப்படின்னு எல்லா மதங்களும் சொல்லுது. இன்றைய இளைஞர்கள் நமது பாரம்பரியம், பண் பாடு தெரியாம போய்க்கிட்டிருக்காங்க. இந்தச் சூழ்நிலையில் விஜய் எப்படி? சொல்றேன். அதுக்கு முன்னால என் கணவரைப் பத்திக் கொஞ்சம் சொல் லணும்.

'மனைவி அமைவதெல்லாம் இறை வன் கொடுத்த வரம்'னு ஒரு கவிஞர் எழுதி யிருக்காரு. என்னைக் கேட்டா, 'கணவன் அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்'னு சொல்வேன். ரெண்டு பேருமே ஒருத்தருக்கொருத்தர் முக்கியம்தானே! என் கணவர் ரொம்பக் கோபக்காரர். அது ஃபிலிம் இண்டஸ்ட்ரியில இருக்கற எல்லா ருக்கும் தெரியும். ஆனா, அவர் அவரோட அம்மாவை அப்படித் தாங்கினாரு. அவர் வளர வளர அவரோட அம்மாவை ராணி மாதிரி வைச்சுக்கிட்டாரு.

என் கணவர் தமிழைத் தவிர வேற எந்த மொழியும் தெரியாத ஒரு சினிமா இயக் குநர். ஆனா, ஒரு கட்டத்துல தமிழ், இந்தி, தெலுங்கு, கன்னடம்னு எல்லா மொழிப் படங்கள்லயும் கொடிகட்டிப் பறந்தார். இதுக்குக் காரணம் என்ன? அவர், அவ ரோட அம்மாவுக்குக் கொடுத்த மரியாதை. ஒரு தாயின் சிறப்பைப் புரிஞ்சிக்கிட்டு, அதுக்கேத்த மாதிரி நடந்துக்கிட்ட பண் பாடு.



# என் பிள்ளை, ராமர் மாதிரி!

சின்ன வயசுலருந்தே இதையெல்லாம் பார்த்துப் பார்த்து வளர்ந்தான் விஜய். பெத்தவங்களுக்கு மரியாதை குடுக்கணும்ங் கறது அவன் மனசுல ஆழமாப் பதிஞ்சு போயிடுச்சு. இப்பவும் நானும் என் கணவரும் கிழிச்ச கோட்டைத் தாண்ட மாட்டான். அதுதான் அவனை உயரத்துல தூக்கி வைச்சிருக்கு. சொல்லப் போனா, விஜய்யும் ராமர் மாதிரிதான். ராமர் மாதிரி ஒரு பிள்ளை பிறக்கணும்னு கடவுள்கிட்ட நான் வேண்டிக்கிட்டது வீண் போகல.

'விஜய்யோட வளர்ச்சி அசுர வளர்ச்சி. ரொம்பக் குறுகிய காலத்துல எங்கேயோ போயிட்டார்'ன்னு எல்லாரும் சொல்றாங்க. ஆச்சரியமாப் பாக்கறாங்க. இதுல ஆச்சரியப்படுறதுக்கு ஒண்ணுமே இல்லை. ஏன்? அடுத்த வாரம் சொல்றேன்.

எழுத்து வடிவம்: **பாலுசத்யா**

*(தொடரும்)*

## என்ன பரிசு?

- சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-சர்ட்...
- குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...

**ஹலோ வாசகர்களே!**

ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. முதல் வாரப் போட்டிக்கு மள மளன்னு என்ட்ரீஸ் குவியுது!



- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி. வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரைப் பற்றிய கேள்வி. சரியான விடைகளை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு. ஸோ, க்விக்!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலிப் போட்டி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம் 7 ஆம் பக்கம் இருக்கு)
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.
- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனா

தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்

கட் & கீப்

விஜய் வின்னர்ஸ்-2

னும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்களுக்கு அந்த இதழ் கிடைக்க உதவி செய்யறோம். ஸோ, டயல் : 4343 8888

• போட்டி குறித்த இறுதி முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

• இந்த வாரப் போட்டி விடைகளை அனுப்ப கடைசி தேதி : 22.05.2008

• போட்டியில் கலந்துக்கங்க; பரிசுகளை அள்ளுங்க!

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 22.05.2008

1. 'ஊர்மிளா... ஊர்மிளா' பாடலை விஜய்யோட சேர்ந்து பாடிய பாடகி?

☐ சித்ரா ☐ ஷோபா சந்திரசேகர்

2. இரட்டை வேடத்தில் விஜய் நடித்த படம்?

☐ ஆதி ☐ அழகிய தமிழ்மகன்

3. விஜய் நடித்த 'பூவே உனக்காக' படத்தின் இயக்குநர்?

☐ விக்ரமன் ☐ பேரரசு

4. 'கில்லி' படத்தில் விஜய் ஆடும் விளையாட்டு?

☐ கிரிக்கெட் ☐ கபடி

5. விஜய்யின் பிறந்த நாள்?

☐ ஜூன் 22 ☐ ஏப்ரல் 3

பெயர் : .................................................... வயது : ..........

முகவரி : ....................................................................

....................................................................

செல் : .............................. இ-மெயில் : ..............................

# காஃபி ஷாப்

இது எங்க ஏரியா உள்ள வராதே!

## கெஸ்ட் டயலாக்!

நல்லா படிச்சா ஸ்காலர்ஷிப்... காமெடியா பேசினா ஃப்ரண்ட்ஷிப்!



● பத்மநாபன்

'ஆட்டோகிராஃப்' படம் பார்த்துட்டு, சேரனுக்கு சிநேகா கிடைச்ச மாதிரி, நமக்கொரு அன்புத்தோழி கிடைக்க மாட்டாளா? என்று ஏங்கிய - ஏங்கும் இளசுகள் நிறைய பேரு இருக்காங்க.

சினிமாவுல மட்டுமில்ல, நிஜத்திலயும் ஆண் - பெண் நட்புக்கு அவ்வளவு சக்தி இருக்கு. இந்த நட்பு, சில நேரம் 20-20 மேட்ச் மாதிரி விறுவிறுன்னும் இருக்கும். டெஸ்ட் மேட்ச் மாதிரி பொறுமையும், பக்குவமும் இருக்கும்.

எல்லாம் இருந்தாலும், இந்த நட்பு எவ்வளவு காலத்துக்கு நீடிக்கும்ங்கிறது ஒரு பெரிய கேள்விக்குறி. இன்னும் சில நட்புகள், காதலாகக் கனிந்துவிடுவது ஆச்சர்யக்குறி!

"இப்ப உள்ள நட்புக்கு ஆயுட்காலம் ரொம்பக் குறைச்சலா இருக்கு. அதுக்குக் காரணம் மாறி வரக்கூடிய நம்முடைய கலாசாரம்தான்" என்கிறார் சதீஷ்குமார். எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாததுதான் நட்புன்னு சொன்னாலும், அதுல எதிர்பார்ப்பு இருக்கும்ங்கிறதுதான் உண்மை.

"ஓர் ஆண், ஒரு பெண்கிட்ட ரொம்ப கேர் எடுத்துக்கிட்டு, வெல் விஷராக மாறி, அந்தப் பெண், அவளுக்குள்ள ஒரு பாதுகாப்பா உணரும்போதுதான், படபடன்னு பட்டாம்பூச்சி பறந்து லவ் பிறக்குது. அதுவரைக்கும் நட்புதான்





● சதீஷ்குமார்



ரெண்டு போர்கிட்டேயும் இருக்கும்'' என்று கூறும் சதீஷ்குமார், ''ரெண்டு பேர் நட்பு நல்லா போய்க்கிட்டு இருக்கும்போது, கல்யாணத்தைக் காரணம் காட்டி பொண்ணுங்க நட்புக்கு ஃபுல்ஸ்டாப் வச்சிடறாங்க'' என்று புலம்புகிறார்.

''முன்ன மாதிரியெல்லாம் இப்ப இல்ல சார்; இப்ப பொண்ணுங்க ரொம்ப ஃப்ரீயா மூவ் பண்றாங்க; சாஃப்ட்வேர் கல்ச்சர் நம்மள நிறைய மாத்திடுச்சு. ஆனா, அந்த நட்புல எந்த அளவுக்கு உண்மை இருக்குங்கிறதுதான் தெரியல'' என்று யதார்த்தமாகப் பேசுகிறார் மணிகண்டன்.

''பொண்ணுங்க ஆண்களைச் சார்ந்து இருக்க வேண்டிய சூழல் கொஞ்சம் கொஞ்சமாக மாறிட்டு வர்றதால, அவங்க சுதந்திரமா செயல்படணும்னு நினைக்கறாங்க. அதுல எந்தத் தப்பும் இல்ல. ஆனா, சில நட்புகள் விபரீதமா போயிடறதும் உண்டு. அந்த சீரியஸ் மேட்டர இப்போதைக்கு நாம விட்டுடலாம். இருந்தாலும், நல்ல ஃப்ரெண்ட்ஸ்ன்னு, காலேஜ்ல நம்மளையெல்லாம் நம்ப வைச்சுட்டு 'டும் டும்'மில் இணைந்த கதைகளும் நிறையவே உண்டு. எனக்குத் தெரிஞ்சு, ஃப்ரெண்டஷிப்ல இப்ப ஃபீலிங் எல்லாம் குறைஞ்சு போச்சு. பிடிக்கலைன்னா

• ஜெமிமா





## நட்போ... காதலோ... பில் எப்போதும் பசங்க தலையிலதான் மாமு

ஆள மாத்தி ஃப்ரெண்ட்ஷிப் வைச்சுக்கிட்டுப் போய்க்கிட்டே இருக்காங்க'' என்று பொரிந்து தள்ளுகிறார் பத்மநாபன். ஆனா, சதீஷ் இதனை மறுக்கிறார்.

''நல்ல நட்புக்கு ஈடு இணை எதுவுமில்லை. அத யாராலும் பிரிக்க முடியாது'' என்கிறார். மேலும் ''எதிர்பாலினரிடையேதான் ஃப்ரெண்ட்ஷிப் ஈஸியா வொர்க்அவுட் ஆகுது'' என்று உருகும் சதீஷ், ''நட்புங்கிற ஒரு நல்ல விஷயம், அது ஆணோ, பெண்ணோ யாருடன் இருந்தால் என்ன?'' என்று கேள்வி



* மணிகண்டன்

கேட்கிறார்.

'**அலைபாயுதே**' பாணியில் ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிவிட்டு, அப்புறம் சமாதானப்புறாவைப் பறக்கவிட்டு, இல்லறம் புகுந்துள்ள ஜோடி ஜெமிமா-நிவாஸ்.

''ஜெமிமாவை முதன்முதலா பார்க்கும்போதே, அவங்ககூட பழகணும்னு தோணுச்சு'' என்று நிவாஸ் கூறும்போது, ''எனக்கும் அப்படித்தான் இருந்தது'' என்று தலையசைத்தார் ஜெமிமா.

ஓரிரு மாதங்களிலேயே, இவர்களின் நட்பு, கலர்ஃபுல் காதலானது. ''எனக்கே எனக்குன்னு பிறந்த மாதிரி ஜெமிமாவை நினைச்சேன். அதுக்குப் பிறகு வேற யாரையும் என்னால நினைச்சுக்கூட பார்க்க முடியல'' என்று நிதானமாகப் பேசுகிறார் நிவாஸ். ''எங்க வீட்டுல அலையன்ஸ் பார்க்கத் துவங்கினதும்தான், ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிடலாமான்னு ஒரு க்விக் டிஸிசன் எடுத்தோம்'' என்கிறார் ஜெமிமா.

இதுபற்றி கனி வண்ணன் கூறும்போது, ''இப்போ, ஆண் - பெண் நட்பு அதிகமாயிடுச்சு. இது ஆரோக்கியமான விஷயம்தான். ஆனால் இதுல அபாயம்



* கனிவண்ணன்

அதிகம். அதனால ஒரு லிமிட் இருந்தா பெட்டர்.''

''ஆணும் பெண்ணும் இப்பதான் நெருங்கிப் பழக ஆரம்பிச்சுருக்காங்க அதை ஆரோக்கியமா பார்ப்போமே'' - இது பேராசிரியர் ராகவ்குமாரின் கருத்து.

நட்பு, காதலாகிக் கனிந்து மணம் பரப்பட்டும். அதில் மாற்றுக் கருத்துக்கூறவில்லை. ஆனால், காதலுக்குப் பிறகும், ஏன் கல்யாணத்துக்குப் பிறகும் இருவருக்கும் இடையே இருக்கும் நட்புக்கு வானம்தான் எல்லையாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால், என்றும் இன்ப மயம்தான்!

- **எம்.திரவியமுருகன்**

# இரண்டு
# வளமான மனைகள்
# ஒரு வியப்பூட்டும்
# முதலீட்டு வாய்ப்பு




கடந்த 10 ஆண்டுகளாக, BLB எஸ்டேட்ஸ் வெளிநாட்டுவாழ் இந்தியர்கள் உள்பட ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்களுக்கு வளமிக்க மனைகளை வழங்கி அவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கையைப் பெற்றுள்ளது. BLBயின் முந்தைய திட்டங்கள் தற்போது கற்பனைக்கெட்டாத வகையில் மதிப்பு கூடி நம்பமுடியாத இலாபங்களை வாடிக்கையாளர்களுக்கு ஈட்டித் தந்துள்ளது.

தற்பொழுது உங்களுக்கு வழங்குகிறோம் இரண்டு புதிய மனைப் பிரிவுகள். வியப்பூட்டும் வகையில் பன்மடங்கு இலாபம் பெற இன்றே முதலீடு செய்ய அழைக்கிறோம்.




## ஸ்ரீ ஹயக்ரீவா நகர்

மஹிந்த்ரா வேர்ல்ட் சிட்டி மற்றும் செங்கல்பட்டு அருகே.
(DTCP அனுமதி எண். 117/2007)



## ஸ்ரீ நரசிம்மா நகர்

பூந்தமல்லி மற்றும் ஆவடி அருகில்
(CMDA அனுமதி எண்.37/2007)

**சிறப்பு அம்சங்கள்:**

✓ முழுவதும் தார்ச் சாலைகள் ✓ சுற்றிலும் வேலியிடப்பட்டது ✓ உடனே வீடு கட்டலாம்
✓ அருகிலேயே வீடுகள் ✓ சுவையான நிலத்தடி நீர் ✓ சுலபமாக சென்று வர ரயில் மற்றும் பஸ் வசதி
✓ தெளிவான பத்திரங்கள் ✓ 5 ஆண்டு காலம் பாதுகாப்பு சேவை.




இலவசமாக மனையை பார்வையிட அழைக்கவும்:

**28345104 / 05 / 06**




## BLB ESTATES PRIVATE LIMITED

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road), **T.Nagar, Chennai - 600 017.** E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com




**வி**ல்லன்களால் சிறை வைக்கப்பட்ட தந்தையைக் காக்கும் மக னின் கதை. ''ஆம்பளையா இருந்தா உன் அப்பனைக் காப்பாத்துடா'' என்று சுமன் சவால்விட, விறு விறு வேகமெடுக்கும் திரைக் கதையின் முன்பாதி, ஜாலி எக்ஸ்பிரஸ். ஆனால் பின்பாதி சீரியஸ் ஷதாப்தி! காட்சிக்குக் காட்சி விஜய்யின் விஸ்வரூப ஆக் ஷன் 'அட' போட வைப்பது இந்தப் படத்தின் ஸ்பெஷாலிட்டி! பணம் தர மறுக்கும் மலேசிய வில்லனை அடித்துத் துவைப்பது முதல், அவர்களின் சமூக விரோதத்தை வெளிச்சம் போட்டுக் காட்டுவது வரை அதிரடி இடி.

விஜய்யின் அலப்பறையில் அதிர்கிறது தியேட்டர். மின்வெட்டு நடனம், பன்ச் டயலாக்... என இளமை திரையில் ததும்பி தியேட்டருக்குள் தெறிக்கிறது! த்ரிஷாவை விஜய் சந்திப்பது கலகல கவிதை. விஜய்யைத் தேடி திருவல்லிக்கேணி வரும் த்ரிஷாவின் பையில் வைரத்தை வைக்க, பின்னர் நடக்கும் சம்பவங்கள் சந்தோஷக் களேபரங்கள்.

விவேக் வரும் காமெடி காட்சிகள் சிரிப்புக் களஞ்சியம். தோற்றத்திலும் குரலிலும் கரடுமுரடு சேர்த்துக் கலக்கியிருக்கிறார் சுமன். ஆஷிஸ் வித்யார்த்தியின் சவுண்டான நடிப்பில் ரசிகர்களைக் கட்டிப்போடுகிறார். என்னதான் கணவன் கெட்டவன் என்றாலும், அவன் அடி வாங்கும் காட்சியில் சரண்யா மகிழ்வது டூ மச்! த்ரிஷாவும் அவ்வப்போது நடிக்கிறார்; குதிக்கிறார்.

அனைவரது கைதட்டலையும் பெறும் ஒளிப்பதிவாளர் கோபிநாத், இயக்குநருக்கு இணையாக உழைத் திருக்கிறார். அதிரடி இசையில் அசத்தியிருக்கிறார் வித்யாசாகர். 'மொழமொழ'ன்னு 'பல்லானது' பாடல்கள் இனி மியூசிக் சேனல்களின் செல்லப்பிள்ளை.

லாஜிக் பற்றிக் கவலைபடாமல் படமாக்கியிருப்பதுதான் குறை. 'தில்'லாக 'கில்லி'யடித்துத் 'தூள்' கிளப்பிய இயக்குநர் தரணி, 'குருவி'யில் அந்த உயரத்துக்குப் பறக்கவில்லை என்பதே உண்மை.

– ஜான் மதி



## உடையழகு... நடையழகு...

# மின்னல் ஹேர்!

**செ**ன்னையின் புதிய ஹேர் ஸ்டைலிஸ்ட் ரோஷ்ணி வழங்கும் டிப்ஸ் :

★ கூந்தல் பளிரென மின்ன ஒரு எளிய வைத்தியம். சாம்பார் வெங்காயத்தை உரித்து தேங்காய் எண்ணெயில் காய்ச்சவும். தலையில் தடவி 15 நிமிடம் ஊறிய பிறகு, கடலை மாவு + சோற்றுக் கஞ்சி கொண்டு அலசவும். தலைமுடி ஜாலம் காட்டும்.

★ ஆலிவ் ஆயில், எலுமிச்சை ரசம், தேங்காய் எண்ணெய் கலவையைச் சூடாக்கவும். தலையில் வேர்ப் பகுதிகளில் தடவவும். டவலைக் கொதிக்கும் நீரில் போட்டுப் பிழிந்து, தலையில் சுற்றிக்கொள்ளவும். இதையே இரு முறை ரிபீட் செய்யவும். பிறகு தரமான ஷாம்பூ போட்டு அலசவும்.

★ தேயிலைத் தண்ணீர் கொண்டு தலையை அலசினால் கண்ணாடி போல் டாலடிக்கும்.

★ தேங்காய் எண்ணெய் + கடுகு எண்ணெய் சம அளவில் எடுத்து, அதில் கறிவேப்பிலை போட்டு இரவு பூரா வைத்திருந்து காலையில் சூடாக்கவும். கறிவேப்பிலை கரகரவென ஆன பிறகு இறக்கவும். ஒரு பஞ்சில் இந்த எண்ணெயை எடுத்து தலைமுடியின் வேரில் நன்கு தடவவும். பிறகு மஸாஜ் செய்யவும். சிறிது ஊறிய பிறகு சீயக்காய் அல்லது ஷாம்பூ போட்டுக் குளிக்கவும்.

★ இரவு படுக்கப் போகும் முன் ஹேர் ப்ரஷ் கொண்டு தலைமுடியை நன்கு ப்ரஷ் செய்யவும். (100 முறை.... ஐயோடா!)

★ வாரமிருமுறை இளநீர் குடிக்கவும்.

★ வினிகர் கொண்டும் தலைமுடியை அலசலாம். ஒரு மக் தண்ணீரில் இரு டேபிள் ஸ்பூன் வினிகர் விட்டு க்ளீன் செய்யவும். வினிகர் கலவை ஊற்றிய பிறகு தலையில் வெறும் தண்ணீர் விடக்கூடாது.

★ வெந்தயம் மிக நல்லது. இரவே ஊற வைத்த வெந்தயம் + துவரம் பருப்பை மிக்ஸியில் நன்றாக அரைத்து, தலையில் நன்கு தேய்த்து முக்கால் மணி நேரத்துக்குப் பிறகு குளிக்கவும். பளபள தலைமுடிதான்.

- லதா சேகர்



★ ரோஷ்ணி



# கல்கி



2008 மே 18
ஸர்வதாரி வைகாசி 5
மலர் : 66
இதழ் : 42

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## அன்புமணியும்... அபத்த பச்சனும்!

**தி**ரைப்படங்களில் மது அருந்துதல், புகைத்தல் காட்சிகளைத் தவிர்க்குமாறு, மத்திய சுகாதாரத் துறை அமைச்சர் அன்புமணி கேட்டிருப்பது மிகுந்த கிண்டலுக் குள்ளாகியிருக்கிறது; கண்டனத்துக்கும் நிராகரிப்புக்கும்கூட உட்பட்டிருக்கிறது.

அன்புமணியின் உயர்நோக்கைப் புரிந்துகொள்ள அமிதாப் பச்சனும், விஜய்காந்தும், ஷாருக்கானும் முயற்சிகூடச் செய்யவில்லை. கலைப் படைப்புகளில் தலையிடுவதாகவும் படைப்புச் சுதந்திரம் பறிபோகிறது என்றும் இவர்கள் குரல் உயர்த்தியிருக்கிறார்கள். படைப்புச் சுதந்திரம் மிக முக்கியமானதுதான். ஆனால், அது பொறுப்புணர்ச்சியுடன் கையாளப்படவேண்டும் என்றுதான் அமைச்சர் கேட்டுக்கொண்டிருக்கிறார். மிக அதிக அளவில் இளம் ரசிகர் கூட்டத்தை உடைய சினிமா கலைஞர்கள், புகை பிடிப்பதை யும் மது அருந்துவதையும் நாகரிகத்தின் வெளிப்பாடு போல் சினிமாவில் செய்கிறபோது, அந்தப் பழக்கங்களுக்கு இலட்சக்கணக்கான ரசிக இளைஞர்கள் உடனே ஈர்க்கப் படுகிறார்கள். சினிமா உடையையும் அலங்காரத்தையும் பின்பற்றுவதுபோல் ஆதர்ச/அபிமான நடிகர்கள் காட்டும் மது - சிகரெட் ஸ்டைலையும் இவர்கள் வரித்துக்கொள்கிறார்கள்.

மதுவும் புகையிலையும், உடலுக்கும் மனத்துக்கும் மிகுந்த கேடு விளைவிக்கின்றன என்பது சந்தேகத்துக்கிடமின்றி






நிருபிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, அவற்றைப் பழக்கிக்கொள்வது சினிமா நட்சத்திரங்கள் மூலமாக 'கிளாமரைஸ்' செய்யப்படுவது கொடுமை! இளைஞர்களை அழிவுப்பாதையில் செலுத்தும் குறுக்கு வழி இது.

இதில் வேடிக்கை என்னவென்றால், 'திரைக்காட்சியில் நாங்கள் குடிப்பதில்லை. குடிப்பது போல் நடிக்கிறோம்; அவ்வளவுதான். எங்கள் கையிலுள்ள கோப்பையில் மதுவே இராது; ஏதோ ஒரு வண்ணத் திரவம்தான் இருக்கும்... இதை ஏன் பெரிது படுத்துகிறீர்கள்? குடிக்காமலே குடிகாரனின் குண இயல்புகளை நாங்கள் வெளிப்படுத்துகிறோமே - அதை மெச்சுங்கள். அது இருக்கட்டும், அரசு ஊழியர்கள் குடிப்பதைத் தடுத்து நிறுத்துங்களேன் பார்ப்போம்' என்றெல்லாம் அமிதாப் பச்சன் படு அபத்தமாக வாதாடியிருக்கிறார். விஜயகாந்த் இந்த அபத்த வாதத்துக்கு ஒத்து ஊதியிருக்கிறார்.

எல்லாமே நடிப்புதான் என்பது புரிந்தால், சராசரி சினிமா ரசிகன், ஏன் நடிகர்களைக் காப்பியடிக்கப் போகிறான்? பெரும்பாலான ரசிகர்கள் திரைக்கும் நிஜத்துக்குமிடையே யான வேறுபாடை உணாமுடியாத மயக்கத்தில்தான் இருக்கிறார்கள். இந்த மயக்கத்தைத்தான் திரைத்துறையும் சாதகமாக்கிக்கொண்டு, கொள்ளை லாபம் பண்ணுகிறது. இதே காரணத்தால்தான், நூற்றுக்கணக்கான விளம்பரங்களிலும் ஷாருக்கானும் அமிதாப் பச்சனும் தோன்றி பணம் பண்ணுகிறார்கள்.

அமிதாப் பச்சனின் ஆற்றலும் விஜயகாந்த்தின் நடிப்பும் ஷாருக்கானின் ஸ்டைலும் இந்தச் சமுதாயம் அளித்த அங்கீகாரத்தினால்தான் தழைக்கின்றன. ரசிகர்கள் இல்லாவிட்டால் இவர்களுக்கு ஒரு மதிப்பும் கிடையாது. தங்களை உருவாக்கி, பெரிய இடத்தில் தூக்கி அமர்த்தியுள்ள இந்தச் சமுதாயத்துக்கு, இந்தக் கனவு வியாபாரிகள் கடமைப்பட்டிருக்கிறார்கள். அந்தக் கடமைகளை நிறைவேற்றாவிட்டாலும் போகிறது; ஏறி வந்த ஏணியை எட்டி உதைக்கலாகாது!




**மி**ன்னல் கதைகள் ஒவ்வொன்றும் இடியாய் இறங்கியது.

**- எல்.மாறன், மேல்பட்டி**

**ரி**ஷபனின் 'காதல் ஒன் வே' சூப்பரோ சூப்பர்.

**- ஜெயந்தி சிவக்குமார், ஸ்ரீரங்கம்**

**ஈ**ஷாவின் அடுத்த தலைவர் யார்? என்ற கேள்விக்கு சத்குரு ஜக்கி வாசுதேவ் பதில், சரியான நெத்தியடி.

**- ஜே.துரைராஜ், சென்னை**

**'நி**யூ டேஸ்ட்டி ட்ரீட்' மற்றும் 'கூலாச் சாப்பிடுங்கள்' இணைத் தலைப்புகள் போட்டு, 'கசக்கும் இனிப்பு'னு எதிர்மறை தலைப்பில் இனிப்பின் அளவைக் குறைக்கச் சொல்லிய டாக்டர் எம்.ராஜேந்திரனின் கட்டுரை, இளைய தலைமுறைக்குரியது.

**- கவிஞர் அய்யாறு எஸ். வாசுதேவன், சென்னை**

**த**வறு யார் செய்தாலும், அதைத் துணிச்சலாகச் சுட்டிக்காட்டும் தைரியம் 'கல்கி'க்கு என்றுமே உண்டு. 'பரமசிவன் கழுத்துப் பாம்பாக பாலு' தலையங்கம் அதை உறுதிப்படுத்துகிறது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**



# ஆகாயம்... ஆஃபிஸ்... அருமை..!

**ல**வ் என்றால் என்ன என்பதை 'இங்கிலீஸ் டியூஷன்' சிறுகதை நன்கு உணர்த்தியது.

**- எம்.செல்லையா, சாத்தூர்**

**மா**ரத்தான் மங்கை கவிதாவை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்த, கல்கியின் பணி பாராட்டுக்குரியது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**ஆ**காயத்தில் ஆஃபிஸ் அமைத்தால் அழகாய்த்தான் இருக்கும்.

**- நா.பிரசன்னா, மதுரை**

**மீ**ண்டும் நக்ஸலைட் தவிக்கும் போலீஸ் - ப்ரியன் கட்டுரை நல்ல எச்சரிக்கை.

**- எஸ்.ஈஸ்வரன், கோவை - 6**

**'ஜி**ல்'லுனு ஒரு சம்மர் - 32 பக்க இணைப்பு - கண்ணுக்குக் குளிர்ச்சி; மனத்துக்கு மகிழ்ச்சி.

**- வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு**

**க**ருணாநிதியை, தமிழகத்தின் ஜாக்கிசானாக சித்தரித்துக் காட்டிய கார்ட்டூன், சரியான டைமிங் காமெடி!

**- வே.ந.கதிர்வேல், வேலூர்**

உறுதியான, பாதுகாப்பான, தரம்மிகுந்த இரும்பு தகட்டிலான கதவுகள்
பல மாடல்களில் 2ல் இருந்து 12 வரை பூட்டும் வசதியுடன் கிடைக்கும்






## CONTEMPORARY SANITARY WARES FROM MINSEN








## IMPORTED OFFICE / DOMESTIC FURNITURES








# RADHA International

NO. 38, CATHEDRAL GARDEN ROAD, NUNGAMBAKKAM. CH - 34. PH : 28254042/43,
CELL : 9840243432, FAX : 28265104. E-mail : radhainternational90@yahoo.com

**DEALERS ENQUIRY SOLICITED**








# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்** : பொறுமைக்குப் பெயர் போன நீங்கள் இந்த வாரம் புதிய தொழில் தொடங்கப் போறீங்க. உத்தியோகத்துல பதவி உயர்வு தேடி வரப் போகுது. கல்வி கேள்வியில மேன்மை அடையப் போறீங்க. உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில இருக்கும். ராகு/கேது/ குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

**ரிஷபம்** : எதற்கும் தளராத மனம் கொண்ட நீங்கள் இந்த வாரம் உற்சாகமான காரியங்களில் செயல்படப் போறீங்க. பொன் பொருள்கள் வாங்கிக் குவிக்கப் போறீங்க. குடும்பத்துக்குள்ளே இருந்த பிரச்னை தீர்ந்து சந்தோஷமாக இருப்பீங்க. உடல் ஆரோக்கியம் எதிர்பார்த்தபடி இருக்கும்ங்க. சனி வழிபாடு மேலும் நன்மையை அதிகப்படுத்தும்.

**மிதுனம்** : பிரச்னைகளைக் கண்டு கலங்காத உங்களுக்கு நீண்ட காலப் பிரச்னைகள் முடிவுக்கு வருமுங்க. வியாபாரம் சூடு பிடிக்கப் போகுது. வழக்குகள்ல வெற்றி காணப் போறீங்க. கல்வியில நல்ல மார்க் எடுப்பீங்க. ராகு/கேது/சனி/குரு வழிபாடு மேலும் நன்மையை அதிகரிக்கப் போகுதுங்க.

**கடகம்** : நெருக்கமான கூட்டாளிங்க உங்களவிட்டு விலகிப் போய்டுவாங்க. கைப் பொருள் தவறிடும். ஜாக்கிரதையா இருங்க. வாக்குவாதம் செய்யாதீங்க. வியாபாரத்துல நல்ல ஏற்றம் தெரியுமுங்க. புதிய தொழில் தொடங்கும்போது கவனம் தேவை. ராகு/கேது/ குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

**சிம்மம்** : தன யோகம் அடிக்கப் போகுதுங்க. பொருளாதாரத்துல மேன்மை அடையப் போறீங்க. நீண்ட காலமாக அச்சுறுத்திக்கிட்டு இருந்த கடன் தொல்லையெல்லாம் தீரப் போகுது. புண்ணிய ஸ்தலம் போகப் போறீங்க. சனி வழிபாடு மேலும் நன்மையை அதிகரிக்குமுங்க.

**கன்னி** : உங்கள் திறமையால் புதிய வேலைவாய்ப்பு தேடி வரப் போகுதுங்க. புது வீட்டுக்குக் குடித்தனம் போகப் போறீங்க. வீடு, மனை வாங்கப் போறீங்க. குடும்ப வாழ்க்கையில இருந்த பிரச்னைகள் தீர்ந்து சந்தோஷம் பெருகப் போகுது. வியாபாரத்துல குறை இருக்காதுங்க. ராகு/கேது/ குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

**துலாம்** : உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வீட்டை மாற்றப் போறீங்க. வழக்கு வெற்றியைத் தரப் போகுது. தொழில்துறை மாற்றம் வரப்



போகுது. எதிர்பாராத செய்தி மகிழ்ச்சியைப் பெருக்கப் போகுது. ராகு/கேது வழிபாடு மேலும் நன்மையளிக்குமுங்கோ.

**விருச்சிகம் :** நீங்கள் நினைக்கிற




## தஞ்சை பரத்வாஜ்

காரியங்கள் நடக்கப் போகுதுங்க. வெளிநாடு போகப் போறீங்க. பொன் பொருட்கள் சேர்க்கை கூடுமுங்க. பூர்வீகச் சொத்துப் பிரச்னைங்க தீருமுங்க. வியாபாரம் நல்லா சூடு பிடிக்கப் போகுது. சனி வழிபாடு நன்மையை அதிகரிக்கும்.

**தனுசு :** கோபத்தை அடக்கியாளும் உங்களுக்கு, குடும்பத்துல சுபச் செலவுகள் உண்டுங்க. கல்வியில நல்ல மேன்மை கிட்டப் போகுதுங்க. கேட்டவுடனே கடன் கிடைக்கும். வேலையில் நல்ல பெயர் வாங்கப் போறீங்க. பணப் பற்றாக்குறை இருக்காதுங்க. ராகு/கேது/குரு/சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.

**மகரம் :** தளராத மனம் கொண்ட உங்களுக்கு சுபகாரியங்கள் தடையில்லாம நடைபெறப் போகுது. வாக்குவாதங்கள் மட்டும் செய்யாதீங்க. வேலைப்பளு அதிகரிக்கும். அதே நேரத்துல உடல் ஆரோக்கியம் நல்லா இருக்குமுங்க. வீடு/மனை வாங்க நல்ல காலமுங்க.

**கும்பம் :** தெய்வ நம்பிக்கையில் அதிக நாட்டம் கொண்ட உங்களுக்கு மகான்களின் தரிசனம் கிட்டப் போகுதுங்க. சுபகாரியப் பேச்சுகள் முடிவுக்கு வருமுங்க. உடல் ஆரோக்கியம் ஜோரா இருக்கும். பணக் கஷ்டம் தீருமுங்க. குரு/சனி வழிபாடு நற்பலனை அளிக்குமுங்க.

**மீனம் :** வாக்கு மேன்மை நிறைந்து காணப்படும். குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. உல்லாசப் பயணம் போவீங்க. வெளிநாடுகளிலிருந்து நல்ல தகவல் வருமுங்க. நல்ல வேலை அமையுமுங்க. ராகு/கேது/சனி வழிபாடு செய்தால் நன்மை மேலும் அதிகரிக்குமுங்க.

**11.05.2008 முதல் 17.05.2008 வரை**

'ஏய், வண்டியை ஏன் இங்கே நிறுத்தி வச்சிருக்கே, கொஞ்சம் தள்ளி நிறுத்தினா குறைஞ்சா போயிடுவே?' அதட்டலாகத் தான் கேட்டிருக்கிறார் அந்தக் காவல்துறை அதிகாரி. 'இங்கே நிறுத்தக்கூடாது என்று ஏதாவது சட்டம் போட்டிருக்கிறார்களா?' என்று அந்தப் பெண் திருப்பிக் கேட்டிருக்கிறார். நீ, நான் என்று போட்டி போட்டுக் கொண்டு இருவரும் சண்டை போட்டிருக்கிறார்கள்? அன்று இரவு அந்தப் பெண்ணின் உடல் சாலையோரமாகக் கிடைத்திருக்கிறது.

ஒரு கறுப்பினப் பெண்ணை ஒரு வெள்ளைக்காரப் போலீஸ் அடித்துச் சாகடித்து விட்டார். கேவலம் கார் பார்க்கிங் தகராறுக்காக ஓர் உயிர் போயிருக்கிறது. விடலாமா வெள்ளைக்காரர்களை? கிளம்பியிருக்கிறார்கள். வெள்ளைக்காரர்கள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ அங்கெல்லாம் புகுந்து தாக்கியிருக்கிறார்கள். உடைமைகள் கொள்ளையடிக்கப்பட்டன. 300க்கும் அதிகமானவர்கள் படுகாயம் அடைந்தார்கள். கொல்லப்பட்டவர்களின் விவரம் கிடைக்கவில்லை.

இது நடந்தது 1964 ஆம் ஆண்டு, ஃபிலடெல்ஃபியாவில் இனக்கலவரங்கள் சர்வ சாதாரணம். இரண்டு குழந்தைகள் வாசலில் நின்று அடித்துக்கொண்டிருந்தார்கள். விவகாரம் பெரிதில்லை. என் ஸ்கேலை யார் உடைத்தது? என் ரப்பரை ஏன் நீ எடுத்தே? இரண்டில் ஏதோ ஒன்று. கீழே தள்ளி மேலே ஏறி அடித்துக்கொண்டிருக்கிறார்கள்.

சத்தம் கேட்டு அவரவர் அப்பா, அம்மா ஓடி வந்திருக்கிறார்கள். 'உன் பையனை ஒழுங்கா வளர்க்கமாட்டியா?' என்று கேட்டபடி, அவர்கள் தனியாக ஒதுங்கிப் போய் ஒரு இன்னிங்ஸ் ஆரம்பித்திருக்கிறார்கள். அப்படியே அக்கம் பக்கம் வீட்டில் உள்ளவர்களும் கூடிவிட்டார்கள், கையில் கிடைத்ததை எடுத்துக்கொண்டு. விசில் ஊதிக்கொண்டே போலீஸ் ஜீப் வர

• அமெரிக்காவின் ஃபிலடெல்ஃபியா

# நித்தம் நடக்கும் ரத்தக் குளியல்!

சென்ற வருடம், 648 முறை ஃபிலடெல்ஃபியாவில் துப்பாக்கிகள் வெடித்திருக்கின்றன. ஜம்முவில் வெடித்த குண்டுகளைவிட இது அதிகம்.



வேண்டியதாகிவிட்டது. கண்ணீர்ப் புகையெல்லாம் ஊதிவிட்டு கூட்டத்தைக் கலைத்திருக்கிறார்கள். அடித்துக்கொண்ட குழந்தைகளில் ஒன்று வெள்ளை, மற்றொன்று கறுப்பு. தொலைந்து போன ஸ்கேல் கிடைக்கவில்லை. ஆனால், நூற்றுக்கணக்கானவர்கள் ரத்தம் சிந்த வேண்டியதாகிவிட்டது.

இதுபோல் ஆயிரத்தெட்டு ரத்த அத்தியாயங்கள். இனக்கலவரம் என்னும் தலைப்பின் கீழ் இவை தொகுக்கப்பட்டுள்ளன. சமீபத்தில் வெளிவந்துள்ள புள்ளிவிவரம் இது. 2007ல் 392 பேர் ஃபிலடெல்ஃபியாவில் மட்டும் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இவர்களுள் 310 பேரின் தோல் நிறம் கறுப்பு.

உலகிலேயே மிகவும் ஆபத்தான இடம் என்று சிவப்பு மையால் வட்டமிட்டு ஜம்மு காஷ்மீரைச் சுட்டிக்காட்டினார் முன்னாள் அமெரிக்க அதிபர் பில் கிளிண்டன். ஒரு தகவல். காஷ்மீரில் சென்ற ஆண்டு கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கை 764. இவர்களுள் 170 பேர் பொதுமக்கள். ஒப்பிட்டுப் பாருங்கள். ஜம்மு காஷ்மீரில் மொத்தம் 7.7 மில்லியன் பேர் வசிக்கிறார்கள். ஃபிலடெல்ஃபியா மக்கள் தொகையைவிட ஐந்து மடங்கு அதிகம். போன ஆண்டு மட்டும் மொத்தம் 648 முறை ஃபிலடெல்ஃபியா வீதிகளில் துப்பாக்கிகள் வெடித்திருக்கின்றன. தனி தேசம் கேட்டுப் போராடும் ஜம்முவில் வெடித்த குண்டுகளைக் காட்டிலும் இது அதிகம்.

சென்ற மாதம் நடைபெற்ற தேர்தல் பிரசாரத்தின்போது, பாரக் ஒபாமா ஃபிலடெல்ஃபியாவில் ஆற்றிய உரை மிகவும் முக்கியமானது. ஃபிலடெல்ஃபியா தொடர்ந்து உதாசீனப்படுத்தப்படுவதற்கான மூல காரணத்தைக் கண்டறிந்து தீர்த்தால்தான், அமெரிக்க மக்களுக்கு விடிவுகாலம் பிறக்கும் என்பதை அழுத்தத்துடன் பதிவு செய்திருக்கிறார் ஒபாமா.

ஓர் உபரித் தகவல். ஃபிலடெல்ஃபியாவாசிகள் ஒபாமாவைத்தான் வெற்றி பெறச் செய்வார்கள் என்று எல்லோரும் நினைத்திருந்த சமயத்தில், மெல்லிய புன்னகையுடன் அவரைத் தோற்கடித்திருக்கிறார் ஹிலாரி க்ளிண்டன். இது முன்னோட்டம் மட்டுமே. அதிபர் தேர்தலுக்கான பிரசாரப் பணிகள் படு மும்முரமாக நடந்துகொண்டிருக்கின்றன. ஒரு நல்ல தலைமைக்காக ஃபிலடெல்ஃபியா காத்துக் கொண்டிருக்கிறது.

# சக்ர வியூகம்

வருமான வரித் துறை அதிகாரி தனது அதிகாரத்தைத் தவறான முறையில் பயன்படுத்தி, இருபது கோடி ரூபாய் கறுப்புப் பணத்தைச் சம்பாதிக்கிறார். அவரை வில்லன் சுட்டுவிட கொன்றது யாருன்னு சஸ்பென்ஸ் இருந்தாலும், வருமான வரித் துறை அதிகாரி பதுக்கி வைத்திருக்கும் இருபது கோடி ரூபாய் பணம் எங்கோ யாரிடம் இருக்கிறதுன்னு சுற்றிச்சுற்றி முழு நீள கதையா சொல்லப்பட்ட விதம் அருமை.

ஹீரோ நட்ராஜ், காதல் காட்சிகளிலும் ஆக்ஷன் காட்சிகளிலும் அசத்தியிருக்காரு. திரையில் தொடர்ந்து அவரைப் பார்க்கலாம். ஹீரோயின் அழகு தேவதை. திரைக்கதை சிக்கலில் சிக்கித் தவிக்கும் நடிப்பு சிறுவன் காதலிக்கும் காட்சிகள் கலாசார கேடு. எந்தக் கேரக்டரானாலும் சிறப்பா நடிக்க முடியும்னு நிரூபிச்சிருக்கார் மலையாள கதாநாயகன் நட்ராஜ்.

க்ளைமாக்ஸ் பழசா இருந்தாலும் கதைக்குப் பொருத்தமா இருக்கு. கல்கத்தாவில் நடக்கிற கதைன்னு சொல்லிட்டு, கல்கத்தா அழகைச் சரியா காட்டாதது மைனஸ். நெஞ்சம் நெகிழ்ற மாதிரி, எந்த சீனும் இல்லாதது திரைக்கதை ஓட்டத்தைக் குறைச்சிடுது.

துவாரகாநாத் ஒளிப்பதிவு கண்களுக்கு நேர்த்தி. கார்த்திக் ராஜா இசையில் புத்தம்புது புல்லாங்குழலின் சொகுசு. சின்னச் சின்ன ஆர்டிஸ்டுகளை வைச்சு நிறைவான படத்தைக் கொடுத்த இயக்குநரைப் பாராட்டலாம்.

சக்ரவியூகம், நல்ல ரசிகனைச் சிறை வைக்கக்கூடிய படம்.

– அம்ருதா



*நியூ டேஸ்ட்டி ட்ரீட்-6*

# கூலா சாப்பிடுங்க!

# இது பழங்களின் கதை!

**கா**லை உணவு சாப்பிட்ட பிறகும் சுமார் பதினொரு மணிக்கு இலேசாகப் பசி எழுவது சகஜம்தான். உடனே வடை, சமோசா, கேக் என்று உள்ளே தள்ளத் தோன்றும். கொஞ்சம் கட்டுப்படுத்திக் கொண்டு பழச்சாறு குடிக்கலாமே.

ஃப்ரெஷ்ஷான பழச்சாறுதான் எப்போதுமே நல்லது. என்றாலும் வீட்டில்தான் சுத்தமான பழச்சாறு தயாரிக்க முடியும் என்று நினைப்பவர்கள், ஃப்ளாஸ்கில் பழச்சாறை எடுத்துச்சென்று காலை உணவுக்கும் மதிய உணவுக்கும் இடைப்பட்ட நேரத்தில் குடிக்கலாம். பழச்சாறில் பக்க விளைவுகள் எதுவும் இல்லை.

சாத்துக்குடி, ஆரஞ்சு ஜூஸ்களில் கலோரிகள் குறைவாகவே இருக்கும்.

சாத்துக்குடியில் சர்க்கரை, சிட்ரிக் அமிலம் மற்றும் மாலிக் அமிலம் ஆகிய மூன்றும் அடங்கியுள்ளன. வால் கோடகாமாவால் இந்தியாவுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட இந்தப் பழத்தில் வைட்டமின் ஏ, பி, சி மற்றும் கால்ஷியம் சத்துகள் உள்ளன. இது ஜீரணத் தொல்லைகள் உள்ளவர்களுக்கு ஏற்றது. ரத்தத்தையும் சுத்திகரிக்க வைக்கக்கூடியது.

கமலா ஆரஞ்சுப் பழத்தில் வைட்டமின் சி சத்து அதிகம் உண்டு. ரத்தத்தைச் சுத்தம் செய்வதோடு கல்லீரல் நன்கு செயல்பட ஊக்குவிக்கிறது.

ஆரஞ்சு அல்லது சாத்துக்குடி பழச்சாறை அருந்தும்போது சர்க்கரை சேர்க்க வேண்டிய அவசியம் இல்லை.

ஆப்பிள் நார்ச்சத்து நிரம்பிய பழம். அதன் தோல் பகுதியில்தான் நார்ச்சத்து அதிகம். தாது சத்துகள் தோலுக்கு ஜஸ்ட் கீழே உள்ளதால், தோல் நீக்கப்பட்ட ஆப்பிளின் 'போங்க் பேலன்ஸ்' குறைவு! ஆப்பிள் பழச்சாறையும் சர்க்கரையின்றிக் குடிப்பதே நல்லது.

இயற்கையான ஜூஸ்கள் என்று விளம்பரப்படுத்தப்படும் ரெடிமேட் ஐட்டங்களில் பெரும்பாலும் ஏராளமான இனிப்புச் சத்துகள் கலக்கப்பட்டிருக்கின்றன. அசிட்டிக் அமிலம் போன்றவற்றை 'ப்ரிஸர்வேட்டிவ்வாக' (கெடாமல் அதிகநாள் இருக்க) கலக்கிறார்கள். தொடர்ந்து இவற்றைக் குடிக்கும்போது வயிற்றில் அமிலத்தன்மை அதிகமாகிறது. இதன் ஆரம்ப கட்டம்தான் ஏப்பங்கள் வெளியேறுவது.

அதற்காக பிற செயற்கை குளிர் பானங்களைக் குடிக்கலாம் என கிளம்பக்கூடாது. ஒரு கோலா பானத்தில் போடப்பட்ட பல்,

---

## இட்லி சாட்

**தேவைப்படும் பொருள்கள்:** இட்லி - 4, இட்லிப் பொடி - 4-5 டீஸ்பூன், எண்ணெய் - 5-6 டீஸ்பூன்.

இட்லிகளைச் சிறிது சிறிதாக வெட்டிக் கொள்ளவும். இட்லிப் பொடியை எண்ணெயுடன் சேர்த்துக் கலக்கிக்கொள்ளவும். பொடி கலவையில் இட்லித் துண்டுகளைச் சேர்த்துப் புரட்டி எடுக்கவும். புரட்டி எடுத்த இட்லித் துண்டுகளை ஒரு கடாயில்போட்டு சூடாக்கவும். அவற்றை ஒரு தட்டில் வைத்து சட்னி அல்லது சாஸுடன் சாப்பிடவும்.



## டாக்டர் எம்.ராஜேந்திரன்

கொஞ்ச நேரத்தில் முழுமையாகக் கரைந்து விட்டது என்று சிலர் கூறுவதுண்டு. குளிர் பானங்கள் என்பவை காற்றடைக்கப்பட்ட நீர், சர்க்கரை மற்றும் ருசிக்காகச் சேர்க்கப் படும் ரசாயனங்கள் ஆகியவற்றின் கலவை தான். எப்போதாவது ஒருமுறை இவற் றைக் குடிப்பதில் தவறில்லை. ஆனால், அதையே ஒரு தினசரி பழக்கமாக்கிக் கொண்டால், உடலில் கலோரிகளும்



கொலஸ்ட்ராலும் கூடும். இந்தப் பானங் களில் 'பூச்சிக்கொல்லி மருந்து இருந் தால்தான் என்ன? நம் வயிற்றில் உள்ள பூச்சிகளை அவை அழித்துவிடாதா?' என்று ஓர் இளைஞர் விதண்டாவாதமாகக் கேட்டார். அந்த அளவுக்குக் குளிர் பானங்களுக்கு அடிமை! நம் வயிற்றுப் பகுதியில் உள்ள முக்கிய, உடல் ஆரோக்கியத்தைக் கெடுக்கக் கூடிய இரண்டு உயிரினங் கள் அமீபா மற்றும் ஸ்ட் ரெப்டோகாக்கை எனப் படும் கிருமிகள்தான். இவற் றைக் குளிர்பானங்களில் இருக்கக்கூடிய பூச்சி மருந்து கொல்வதில்லை. மாறாக, இரைப்பையின் உட்பகுதியை இவை நாளடைவில் அரிக்க வாய்ப்பு உண்டு.

கோடை காலத்தில் தர்பூஸ் பழச்சாறு மிகச் சிறந்தது. எக்கச்சக்கமான நீர்ச்சத்து கொண்ட பழம் இது. வயிற்று வலிக்கு ஏற்றது. சிறுநீர் பெருக்கியும்கூட. பசியைத் தூண்டக்கூடியது. நரம்புகளுக்கும் நல்லது. கலோரி என்பது கிட்டத்தட்ட இல்லவே இல்லை.

திராட்சைப் பழ ஜூஸ் குடித்தால் சளி பிடித்துக்கொள்ளும் என்று சிலர் கூறுவது சரியல்ல.

ஆனால், ஒரு விஷயத்தில் கவன மாக இருங்கள். அழுகிய பழங் களிலிருந்து தயாரிக்கப்படும் சாறை ஒருபோதும் குடிக்க வேண்டாம். ஸ்டார்டர், அப்பிடைஸர் என்று சூப் அருந்துவ துண்டு. பழச் சாறும் அருந்த லாம். இந்த இரண்டுமே வயிற்றில் அமிலம் உண்டாவதைச் சற்று அதிகரிக்கின்றன. இதன் காரணமாக வரப்போகும் உணவை ஜீரணிக்க வயிறு தயார் நிலையில் இருக்கிறது.

**(தொடரும்)**

எழுத்து வடிவம்: **ஆதர்ஷ்**



## கர்நாடகத்தில் மதிக்கத்தக்க தலைமை என்று ஒருவர்கூட இல்லை!

# பாவம் கர்நாடகா!





தேர்தல் அறிவிக்கப்பட்டதும், அரசியல் கட்சிகள் தங்களுடைய பிரசாரத்தை முழு வேகத்தில் முடுக்கிவிடுவார்கள். முக்கியத் தலைவர்கள் மாநிலம் முழுவதும் சுற்றுப் பயணம் செல்வார்கள், வாக்குறுதிகள், விவாதங்கள், எதிர்ப் பிரசாரங்கள் தூள் பறக்கும்.

ஆனால், கர்நாடக மக்கள் மட்டும், இந்த விஷயத்தில் ரொம்பப் பாவம். அவர்களுக்குத் தேர்தல் என்றவுடன், ஆவலாக எதிர் பார்ப்பதற்கு அநேகமாக எதுவுமே இருப்பதில்லை!

இத்தனைக்கும், இந்திய அளவில் முக்கிய கட்சிகளான காங்கிரஸ், பாரதிய ஜனதா ஆகிய இரண்டுமே, இங்கே கிட்டத்தட்ட சம பலத்துடன் இருக்கின்றன. கூடவே, ஜனதா தளமும் பல வடிவங்களில் வோட்டைப் பிரித்து கலாட்டா செய்துகொண்டிருக்கிறது.

இத்தனைக்கும் நடுவே, கர்நாடகத்தில் மதிக்கத்தக்க தலைமை என்று ஒன்று உருவாகவே இல்லை.

சந்தேகமிருந்தால், கர்நாடகத்தின் முக்கிய அரசியல் சக்திகளாக இருக்கும் அரசியல் தலைவர்களை ஒரு சின்ன சாம்பிள் பாருங்கள் :

முன்னாள் பிரதமர் ஹெச்.டி. தேவகௌடா, இப்போது உள்ளூர் அரசியலில் ரொம்ப பிஸி. விவசாயிகளின் வாக்கு வங்கியை, இவர்தான் பத்திரமாக லாக்கரில் பூட்டி வைத்திருப்பதாகப் பேசிக்கொள்கிறார்கள்.

ஆனால், அதேசமயம், அவருக்கும் அவருடைய மகன், முன்னாள் முதல்வர் குமாரசாமி தேவகௌடாவுக்கும் இடையே நட்பா, விரோதமா, அல்லது பாசமா என்பது அநேகமாக யாருக்கும் புரியாத ரகசியமாக இருக்கிறது.

முக்கியமாக, குமாரசாமி பதவியிலிருந்து விலகியபின் நிகழ்ந்த அரசியல் கூத்துகளை, கர்நாடக மக்கள் இன்னும் மறக்கவில்லை.

இன்னொரு பக்கம், காங்கிரஸ் நெடுங்காலமாகப் பதவியில் இல்லாத சோகத்தில் இருக்கிறது. அந்தக் கட்சியின் உள்ளூர்த் தலைவர்கள் ஒன்றாகச் சேர்ந்து, 'கட்சியைப் பலப்படுத்துவோம்' என புன்னகை போஸ் கொடுக்கிறார்கள்.

ஆனால், காங்கிரஸ் ஜெயித்துவிட்டால், யார் முதல்வர் என்பதைப் பற்றி இப்போதைக்கு யாரும் பேச விரும்பவில்லை. ஆகவேதான், ஆளுநராக அரசாங்கச் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்த முன்னாள் முதல்வர் எஸ்.எம்.கிருஷ்ணா, திடுதிப்

# மே-10, கர்நாடக சட்டமன்றத் தேர்தல்

பென்று கட்சிப் பணிக்குத் திரும்ப வந்திருக்கிறார்.

பாரதிய ஜனதா கட்சி, வடக்கே பல மாநிலங்களில் ஆட்சியைப் பிடித்திருக்கிறது. தெற்கே, அவர்களுக்குக் கிடைத்த முதல் வாய்ப்பு, கர்நாடகம்தான்.

ஆனால், அந்த அபூர்வமான வாய்ப்பு, ஒரே வாரத்தில் பறிபோய்விட்டது. இதனால் பெருமளவு ஏமாந்தவர் என்று





பார்த்தால், எடியூரப்பாதான்.

ஆட்சியைத் திடுதிப்பென்று இழந்த பா.ஜ.க., 'அந்த அநியாயத்துக்கு நீதி வழங்குங்கள்' என்று மக்களைக் கேட்கிறது. அவர்கள் ஆட்சி இழக்கக் காரணமான ஜனதா தளம், 'அடுத்த முறை இந்த வம்பெல்லாம் இல்லாமல், எங்களிடமே முழு ஆட்சியையும் கொடுங்கள்' என்கிறது. இத்தனையையும் வேறு வழியில்லாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறது காங்கிரஸ்.

இந்தக் கட்சிகள் எல்லாம், விதவித [illegible] கர்நாடக மக்களின் உணர்வுகளைத் தூண்டி விடுவதில் ஒற்றுமையைக் கடைப்பிடிக்கின்றன.

பெரும்பாலும் இவர்களிடம் சிக்குவது, கூப்பிடுதூரத்தில் இருக்கும் தமிழகம்தான். காவிரிப் பிரச்னை, ஒகேனக்கல் விவகாரம் என்று கிளறிவிடுவதற்கு ஏதாவது கிடைத்துவிடுகிறது.

உண்மையில், கர்நாடகத்தில் உடனடியாகக் கவனித்துச் சரிசெய்ய வேண்டிய அடிப்படைப் பிரச்னைகள் நிறைய இருக்கின்றன. நகரம் - கிராமம், பணக்காரர் - ஏழை வேறுபாடு, வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத அளவு இங்கே படுமோசமாக இருக்கிறது.

பெங்களூருவைத் தாண்டி வெளியே போய்விட்டால், சில நூற்றாண்டுகள் பின்னோக்கிச் சென்றுவிடுவதுபோல் உணர முடிகிறது.

ஆனால், இதற்கெல்லாம் நீண்ட காலத் திட்டங்கள் வகுத்து, பிரச்னையை முழுவதுமாகத் தீர்க்கக்கூடிய அணுகுமுறையைப் பார்க்கமுடிவதில்லை. அரசியல் கட்சிகள், தலைவர்கள் எல்லோருக்கும், தற்காலிகமாக, ஒரு நெருப்பை மூட்டிக் குளிர் காய்வதில்தான் ஆர்வம் இருக்கிறது.

இப்போதைய நிலைமையில், கர்நாடகத்தில் எந்தக் கட்சியும் பெரும்பான்மை பலத்தோடு ஆட்சி அமைக்கும் என்பது நிச்சயமில்லை. மீண்டும் 'தொங்கு' சட்டமன்றம் அமைந்தால், இன்னும் என்னென்ன கூத்துகளெல்லாம் நடக்கப் போகின்றனவோ!

பாவம், கர்நாடக மக்கள்!

– ஆர்.பவானி



# கைதிகளின் காய்கறித்

***திருச்சி மத்திய சிறைச்சாலையில் முப்பத்தைந்து ஏக்கர் பரப்பளவில் விவசாயம் செய்கிறார்கள்; அதுவும் சிறைக் கைதிகளே! இது, 'இந்திய சிறை வரலாற்றிலேயே முதல்முறையாக...' என ஆச்சர்யப்படும் வகையில் ஓர் அதிசயச் செய்தி! அறிந்துகொள்ள ஆவலுடன் களத்தில் இறங்கினோம்...***

திருச்சி மத்திய சிறைச்சாலை, முந்நூறு ஏக்கர் பரப்பளவு கொண்டது. தற்போது அதனுள்ளே இரண்டாயிரத்து இருநூறு கைதிகள் உள்ளனர். அவர்களின் உணவுக்கென தினசரி முந்நூறு கிலோ காய்கறிகள் தேவைப்படுகின்றன. சிறை வளாகத்தின் நெடிதுயர்ந்த சுவர்களை யொட்டி, முட்செடிகள் மண்டி, பெருங் காடு போல இருந்தது. சிறைத்துறை அதிகாரிகள் கலந்து பேசினர். முட்புதர்களை அகற்றி நிலத்தினைச் சீர்படுத்த முடிவானது. சிறைக் கைதிகளைக் கொண்டே காய்கறித்தோட்டம் அமைக்கத் திட்டமிடப் பட்டது. சிறைத்துறை கவாத்து மைதானத்தையொட்டி இருவேறு இடங்களில், சுமார் முப்பத்தைந்து ஏக்கர் பரப்பளவில் அடர்ந்திருந்த முட்செடிகளை அப்புறப் படுத்தினர். அங்கே சென்று பார்த்த சிறைத்துறை அதிகாரிகளுக்கு இன்ப அதிர்ச்சி!

''வெவ்வேறு இடங்களில் மூன்று கிணறுகள் அமைந்திருந்தன. இத்தனை வருடங்களாக கருவேல முள் மரங்கள் அவற்றை மறைத்திருந்தன. ஒவ்வொரு கேணியிலும் தண்ணீர் வளம் மிகுதியாகவே இருந்தது. தண்ணீர் வளம் நிறைந்த கேணிகளை ஏதோ புதையல் கிடைத்த மாதிரி பார்வையிட்ட சிறைத்துறை, ரொம்பவும் உற்சாகமாகிவிட்டது. நிலங்களை டிராக்டர் கலப்பை கொண்டு பல முறை உழுது போட்டு, தோட்டங்களை வகை வகையாகப் பிரித்துக்கொண்டோம். கேணி





# தோட்டம்!

களுக்கு மின் மோட்டார் பம்ப் செட் பொருத்தப்பட்டது. அந்தக் கருவேல மரங்கள் நிறைந்த முட்காட்டினை, அருமையான காய்கறித் தோட்டங்களாக மாற்றியமைத்தோம். கடந்த ஒன்றரை ஆண்டுகளாகவே மிகச் சிறப்பாக பலன் தந்து வருகிறது, மத்திய சிறைக் காய்கறித் தோட்டம்!'' எனச் சொல்கிறார் மத்திய சிறைத்துறை ஜெயிலர் இளவரசன்.

**வி**தைகள் மற்றும் நாற்றுகளை, சேலத்தில் இயங்கி வரும் Bethel World Vision India என்கிற தொண்டு நிறுவனம் இலவசமாக அனுப்பி வருகிறது. வாழைத் தோட்டம், முருங்கைத் தோட்டம், மூலிகைப் பண்ணை, தென்னங்கன்றுகள் நடப்பட்டு இன்னும் மூன்றாண்டுகளில் பலன் தரவிருக்கின்றன.

குளிர்ப் பிரதேசத்தில் மட்டுமே பயிராகும் காலிஃப்ளவர், நூல்கோல், பீட்ரூட், டர்னிப் போன்ற காய்கறிகள்கூட இங்கு விளைகின்றன.

ஆயுள் தண்டனைக் கைதிகளில் குறிப்பிட்ட பதினைந்து நபர்கள் தேர்வு செய்யப்பட்டு, காய்கறிப் பண்ணை வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் ஏற்கெனவே விவசாய வேலைகள் தெரியும் என்பதால், தோட்டக் கலைப் பயிற்சி ஏதும் தேவைப்படவில்லை.



ஆ.முருகேசன்

''**த**ற்போதுதான் பணி மாறுதலாகி இங்கு வந்துள்ளேன். சிறைத் துறை டி.ஐ.ஜி. என்றா, முன்னாள் மத்திய சிறை கண்காணிப்பாளர் சேகர் ஆகிய இருவருக்கு மட்டுமே இந்தக் காய்கறித் தோட்டம் அமைத்ததன் முழுப் பெருமையும் சாரும். சமீபத்திய எட்டு மாதங்களில் சுமார் பதினான்காயிரம் கிலோ காய்கறிகள் இங்கு உற்பத்தியாகியுள்ளன. எங்களுடைய தினசரி தேவை போக, உபரியாக மிஞ்சும் காய்கறிகளை, அன்றைய தினமே கடலூர் மத்திய சிறைக்கும் புதுக்கோட்டை மாவட்ட சிறைக்கும் அனுப்பி வைத்து விடுகிறோம். இங்கு வேலை பார்க்கும் கைதிகளுக்கு சம்பளம் உண்டு. அவர்கள் மிகுந்த ஈடுபாட்டுடன் வேலை செய்கின்றனர். இதனைச் சிறிதளவும் தொய்வின்றி நடத்திச் செல்ல வேண்டும். இதுபோன்ற சிறைத் தோட்டங்களை மேலும் விரிவுபடுத்த வேண்டும் என்பதும் எனது சிறைத்துறைப் பணிகளில் ஒன்றாகும்!'' என்கிறார் திருச்சி மத்திய சிறை கண்காணிப்பாளர் (பொ) ஆ.முருகேசன்.

**செய்தியும், சித்திரங்களும்:**

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

த

தமிழ்நாடு முஸ்லிம் முன்னேற்றக் கழகத்தின் தலைவர் பேராசிரியர் எம்.ஹெச்.ஜவாஹிருல்லாஹ் இஸ்லாமிய வங்கிகளின் தரமும், செயற்பாடும் என்ற தலைப்பில் தாம் சமர்ப்பித்த பி.ஹெச்.டி. ஆய்வுக் கட்டுரைக்காகச் சென்னை பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். இந்த ஆராய்ச்சியின் முக்கிய அம்சம் வங்கிகள் வட்டியில்லாமல் கடன் கொடுக்கும் சாத்தியம் உண்டு என்பதை வலியுறுத்துவதுதான். அவரைச் சந்தித்தோம்...

**அதென்ன இஸ்லாமிய வங்கி?**

''இஸ்லாமிய வங்கி என்றால் வட்டியில்லாமல் இயங்கும் வங்கி. சாதாரண வங்கிகளுக்கும் இஸ்லாமிய வங்கிகளுக்கும் இடையே உள்ள அடிப்படை வேறுபாடே வட்டிதான். நடப்பு கணக்கு, சேமிப்புக் கணக்கு, ஏற்றுமதி மற்றும் இறக்குமதி தொடர்பான பரிவர்த்தனைகள், பன்னாட்டுச் செலாவணிகளை உடனே மாற்றம் செய்தல், பணத்தை ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு மாற்றுதல் உள்ளிட்ட அனைத்து வங்கி நடைமுறைகளையும் இஸ்லாமிய வங்கிகள் செயல்படுத்துகின்றன. ஆனால், இவை எதுவுமே வட்டியின் அடிப்படையில் நடைபெறுவதில்லை.''

**வட்டியில்லாமல் ஒரு வங்கி எப்படிச் செயல்பட முடியும்?**

''தத்துவ அறிஞர் அரிஸ்டாட்டில் வட்டியைக் கடுமையாக எதிர்த்துள்ளார். யூதர்கள் தமக்கிடையே வட்டியின் அடிப்படையில் பரிவர்த்தனை செய்திடக் கூடாது என்று கூறப்பட்டது. ஆனால், யூதர்களுக்குப் பிற சமூகத்தினர் கடனாகக் கொடுக்கும் பணத்துக்கு வட்டி வசூலிப்பதால் அத்தகையோரிடம் செய்யப்படும் பரிவர்த்தனைகளில் யூதர்களும் வட்டியை வசூலிக்கலாம் என்று விலக்களிக்கப்பட்டது. வட்டிக்குக் கடன் கொடுப்பது, வாங்குவது அல்லது வேறு எந்த வழியிலும் வட்டியை மையமாகக் கொண்டு செயல்படுபவர்கள் நரகத்துக்கு உரியவர்கள் என்று நபிகள் நாயகம் சொல்லியிருக்கிறார். இதே வழியில் இஸ்லாமிய மார்க்கம் வட்டியைத் தடை செய்து வணிகத்தை அனுமதித்துள்ளது.''



● ஜவாஹிருல்லாஹ்

**இஸ்லாமிய வங்கியின் செயல்பாடு பற்றிச் சொல்லுங்கள்...**

''சாதாரண வங்கிகள் தம்மிடம் போடப்பட்ட பணத்தை, தொழில் தொடங்கப் பணம் தேவை என்று விண்ணப்பித்தவருக்கு அளிக்கின்றன. பணத்தைப் பெறுபவரிடம் கூடுதல் வட்டித் தொகையை வசூலித்து அதில் ஒரு பகுதியை வைத்துக்கொண்டு மீதியை வங்கியில் பணம் போட்டவருக்கு வழங்குகின்றன. இதற்கு மாறாக, இஸ்லாமிய வங்கி, தொழில் தொடங்கப் பணம் தேவைப்படுபவரின் தொழிலில் ஒரு பங்காளியாகச் சேர்ந்துகொள்கிறது. அவருடன் அத்தொழிலில் லாப நஷ்டத்தைப் பகிர்ந்துகொள்ளும்

உடன்படிக்கையைச் செய்து கொள்கிறது. இந்தத் தொழிலிலிருந்துகிட்டு வருமானத்தில் ஒரு பகுதியை தான் வைத்துக்கொண்டு, மீதியைத் தன்னிடம் பணம் போட்டவருக்கு அவருடன் செய்து கொண்ட உடன்பாடின் அடிப்படையில் அளித்துவிடுகின்றது.''

**இந்தியாவில் இஸ்லாமிய வங்கிகளைச் செயல்படுத்துவது சாத்தியமா?**

''பல மதச்சார்பற்ற வெளிநாடுகளில் ஹெச்.எஸ்.பி.சி., ஸ்டாண்டர்டு சார்ட்டர்டு வங்கி, பி.என்.பி., பார்விபாஸ் போன்ற வங்கிகள் வட்டியில்லாத முறையிலும் பரிவர்த்தனைகள் நடைபெற வழிவகுத்துள்ளன. இந்த வட்டியில்லாத பரிவர்த்தனைகள் அந்த வங்கிகளில் 'இஸ்லாமிக் விண்டோஸ்' என்று அழைக்கப்படுகின்றன. இதுபோன்று இந்தியாவிலும் தாங்கள் செயல்பட மத்திய அரசு அனுமதிக்க வேண்டும் என்று கோரிக்கை வைத்துள்ளன. பிரதமர் டாக்டர் மன்மோகன் சிங், இது தொடர்பாக ஆய்வு செய்வதற்காக ஓர் உயர்மட்டக் குழுவை அமைத்துள்ளார். சிங்கப்பூர், தாய்லாந்து, இலங்கை, பிரிட்டன் உள்ளிட்ட நாடுகள் தங்கள் நாடுகளில் வங்கிகளை நிர்வகிக்கும் சட்டங்களைத் திருத்தி, இஸ்லாமிய வங்கிகள் செயல்பட வழிவகுத்துள்ளன. இதேபோல் இந்திய அரசும் செய்யவேண்டும்.''

# வட்டி கேட்காத வங்கி!

**வட்டியில்லாத அடிப்படையில் இயங்கும் வங்கிகள் வெற்றி பெற்றுள்ளனவா?**

''நிச்சயமாக வெற்றி பெற்றுள்ளன. உலகம் முழுவதும் பல்வேறு நாடுகளில் 300 இஸ்லாமிய வங்கிகள் செயல்பட்டு வருகின்றன. இஸ்லாமிய வங்கிகளின் சொத்து மதிப்பு 300 பில்லியன் டாலர்களுக்கும் அதிகமாக உள்ளது. வைப்புத் தொகை 202 பில்லியன் டாலர்களைவிட அதிகமாக உள்ளது. பொருளாதார வளர்ச்சி ஆண்டுதோறும் 10 முதல் 20 சதவிகிதம் வரை பெருகி வருகின்றது.''

சந்திப்பு : ஸ்ரீநி

# புள்ளிகள்... கோலங்கள்...

**மா**லை, நான்கு மணி.

பொன்ராஜ் வீட்டுக்கு வந்துவிட்டிருந்தார்.

பையன் வீட்டார், வருவதாகச் சொன்ன நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது.

''எல்லாம் தயாரா, தயாரா...'' என்று அடிக்கடி பொன்ராஜ் விசாரித்தார்.

''என்னடா பொன்ராஜ், ஏதோ முகூர்த்தத்துக்கு நேரமாகிற மாதிரி பதர்ற? பொண்ணு பார்க்கத்தானே வரப்போறாங்க!''

தாயம்மாள் மகனைக் குறைபட்டார்.

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

விரைந்தார்.

காரிலிருந்து தரகரும், பிள்ளையும் வீட்டாரும் இறங்கினர்.

அவர்களை வரவேற்று, உள்ளே அழைத்து வரும்போது, குபிரென்று ஒரு குரல்.

''இது உருப்படாது... இந்தக் குடும்பம் விளங்காது... நாசமாப் போகும்... என் வயித்தெரிச்சல் சும்மா போகாது...'' என்று அதிர வைத்தது.

பதற்றத்தின் உச்சத்துக்கே போய் விட்டார் பொன்ராஜ்.

பார்வதி ஓடிப்போய் டீ.வி.யை ஆஃப் செய்தாள். அங்கே நின்றிருந்த குணசேகரின் குழந்தை சிணுங்கியது.

''நான்... டீ.வி. பார்க்கணும்...''

''ம்...ம்... பார்க்கலாம். கார்ட்டூன் சேனல் பார்க்கலாம், அப்புறம் சரியா...?'' - என்று சமாதானப்படுத்திக்கொண்டிருக்கையில், கோகிலா விடுவிடென்று அங்கே வந்து, குழந்தையின் முதுகில் ஒன்று வைத்து... ''சனியனே... இங்கெல்லாம் வராதேன்னு சொன்னேனே... ஏன் வந்தே...?'' என்று கதறக் கதற இழுத்துப் போனாள்.

''இதுக்கு ஏம்மா குழந்தைய அடிக்கற, அதுக்கு என்ன தெரியும்... பாவம்'' தரகர், சூழலை இயல்பாக்க முனைந்தார்.

பரஸ்பர அறிமுகத்துக்குப்பின், 'பெண் பார்த்தல்' நடந்தது.

சேலையில் கலேகா தேவதைதான்.

எல்லோர்க்கும் ஏகமனதாக பிடித்துப்போயிற்று. காஃபி, பலகாரம் முடித்துக்கொண்டு கிளம்பினர்.

பொன்ராஜ், திருப்தியடைந்தார்.

அவர் திருப்தி... ஒரு நாள்கூட நீடிக்கவில்லை.

மறுநாளே,

'பெண் வேணாம்... வேற இடம் பாருங்க...' என்று தகவல் வந்தது.

**(தொடரும்)**








Dealers: Kurl-on® Sleepwell.

பார்த்தவுடன்
வாங்கத் தூண்டும்!
வாங்கியபின்
மனது கொண்டாடும்!!

**Discount upto 30% off**



For purchase of Rs.**25000**/- & above
2 gram Gold coin **FREE**

For purchase of Rs.**50000**/- & above
5 gram Gold coin **FREE**








# Sree Gayathri Sales Corporation

தரம் என்றும் நிரந்தரம்! அதுவே எங்கள் தாரக மந்திரம்!!

We make all kinds of furniture & Interior Works

#29, Royapettah High Road, Chennai - 600 014. Ph:044-28131220 Mobile: 9840206669

''**நா**ன் பெருமாளைப் போய்ப் பாடியது உண்மை. ஆனால் ஏதாவது ஒரு பயனைக் கருதிப் பாடியிருந்தாலன்றோ அந்தப் பயனை உனக்குக் கொடுக்க முடியும். **அவன்** பயனுக்காக, அவனுடைய ஆனந்தத்துக்காக, அவனுடைய தரிசனத் துக்காகப் பாடினோமே தவிர, பயன் கருதிப் பாடவில்லை...'' என்று பிரம்ம ராக்ஷஸிடம் நம்பாடுவான் சொல்ல, ''கைசிகப் பண்ணிலே கடைசி ஸ்தோத்தி ரத்தைப் பாடியிருப்பாயே, அதன் பயனை மட்டுமாவது கொடு'' என்று அதுவும் விடாமல் கேட்டது.

''பயன் கொடுப்பது நம் வேலை யில்லை. அது திருக்குறுங்குடி நம்பியின் வேலை. 'அந்தப் பாட்டின் பயனைக் கொடு' என்று நம்பியிடத்திலே உனக்காகப் பிரார்த்திக்கிறேன்...'' என்று நம்பாடுவான் அங்கிருந்தபடியே பிரார்த்திக்க, நம்பியும் அனுக்கிரஹிக்க, பிரம்மராக்ஷஸ் சாபவி மோசனம் பெற்றது.

**இ**ப்படிப்பட்ட திருக்குறுங்குடியிலே நம் ஒவ்வொருவருக்குள்ளேயும் இருக்கும் பிரம்மராக்ஷஸை விடுவித்து, தன் திருவடி சேர்த்துக்கொள்ள வல்லவனாய் நம்பி ஸேவை சாதிக்கிறான். திருவடி தொடங்கி திருமுடி ஈறாக, திருமுடி தொடங்கி திருவடி ஈறாக - அங்கம் அங்கமாக லாவண்யம் தாண்டவமாடக்கூடிய திவ்ய மங்கள விக்ரஹம். 'ருசி ஜனக விபவ லாவண்யம்' என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்கிற ஆசார்யர் தெரிவிக்கிறார். நாம் எத்தனையோ கண்ட கண்ட வேலைகளில் ஈடுபட்டிருக்கிறோம். அவற்றிலிருந்து நம்மைத் தன்பால் ஈர்ப் பதற்குப் பெருமான் எத்தனையோ முயற்சி களைச் செய்கிறார். எதனாலேயும் நாம் அவன்பால் ஈர்க்கப்படுவதில்லையென்கிற போது, கடைசியாக பிரம்மாஸ்திரத்தைப் போலே தன் திருமேனி அழகைக் காட்டித் தன் பக்கத்திலே ஈர்த்துவிடுகிறார். அவ் வழகுக்கு மயங்காதார் உலகத்தில் யாருமிலர். நம்பியின் வடிவழகைக் கண்டோமென்றால் மனம் மற்றொன்றில் செல்லாது. திருமேனி முழுக்க அழகாக இருந்தால் அதற்கு லாவண்யம் என்று பெயர். அங்கம் அங்கமாக அழகாக இருந் தால் அதற்குச் சௌந்தர்யம் என்று பெயர்.



# முளைக்கதிரும் மழைமுகிலும்!

வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் ஸ்வாமிகள்



# கண்ணனைத் தேடி - 4

இரண்டுமே இந்த திருக்குறுங்குடி நம்பிக்கு உண்டு. உலகத்திலிருக்கிற தங்கம், வைரம், வைடூரியம், சூரியன், சந்திரன் - இத்தனையையும் சேர்த்து ஒரு ஜோதி உருவமாக்கி அந்த உருவத்துக்கு ஒரு பெயர் கொடுத்தால் எப்படியிருக்குமோ, அப்படிப்பட்டது திருக்குறுங்குடி நம்பியினுடைய சேவை. 'நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த நீண்ட பொன் மேனி' என்று நம்மாழ்வார் கொண்டாடுகிறார். நீங்கள் நேரே வந்து கண்கொண்டு சேவித்தால் ஒழிய இதை யாருக்கும் புரியவைக்க முடியாது.

திருக்குறுங்குடிக்குச் செல்லும்போது, இங்கே கர்பகிருஹத்திலே ஒரு சிறு



ஆஸனம் உண்டு. வெளியிலேயிருந்து அதை ஸேவித்துவிட முடியாது. ஆனால், அர்ச்சக ஸ்வாமியைக் கேட்டால் காண்பித்து, கதையைச் சொல்லுவார்கள் :

பகவத் ராமானுஜர் இத்திருத் தலத்திலே பெருமானை ஸேவிப்பதற்காக வந்தார். மங்களா சாஸனத்தை முடித்தார். விடைபெற்றுக் கொண்டு புறப்படுகிறார். அப்போது பெருமான் கேட்கிறார் : ''நானும் எத்தனையோ முயற்சி எடுத்துப் பார்க்கிறேன்; அடியார்களைத் திருத்த முடியவில்லை. ஆனால், நீர் போய்ப் பிறந்தீர். எப்போது நீர் ஸ்ரீபெரும்புதூரிலே திருவடிகளைப் பதித்தீரோ, உலகம் திருந்தத் தொடங்கிற்றே! என்னால் முடியாத மந்திரம் நீர் ஏதோ வைத்துக் கொண்டிருக்கிறீர். எதைக் கொண்டு உலகத்தைத் திருத்துகிறீர் என்று சொல்லும்?''

• பிரஹலாத நரசிம்மர்



ராமானுஜர் விட்டுக்கொடுத்து விடுவாரா...? ''நீ இவ்வளவு நெடிய உருவத்திலே நின்று நான் குறுகியவனாய்க் கீழே நின்றுகொண்டு பார்த்தால், நீ ஆசார்யன் - நான் சிஷ்யன் என்று தோன்றும். நீ சிஷ்யனாக நில். எனக்கு ஆசார்யனுக்குண்டான பீடத்தைக் கொடு. கை கட்டி வாய் புதைத்து நில்!'' என்றார்.

உடனே திருக்குறுங்குடி நம்பியும் ஏக (சம) ஆஸனத்தை இட்டு அங்கே ராமானுஜரை எழுந்தருளப் பண்ணினார். வாய் புதைத்து, முதுகைக் குனிந்து வினயமாய்ப் பணிவன்போடு ராமானுஜரிடத்திலே கேட்க, ''உன்னிடம் இல்லாத மந்திரம் என்னிடம் எதுவும் இல்லை. திருமந்திரமும் த்வயமஹாமந்திரமும் சரமச்லோகமும் எல்லாமே நீ வெளியிட்டவை தான்... அவற்றைக்கொண்டே உலகைத் திருத்துகிறேன். ஆனால் யாருமே 'தானே பெரியவன், தானே கடவுள்' என்று சொல்வதை நாம் நம்பமாட்டோம். நீ பிறந்து நானே பெரியவன் கடவுள் என்கிற படியால் யாரும் நம்ப மறுக்கிறார்கள். ஆனால், ஒரு மஹா ஆசார்யர் பிறந்து, 'அதோ அந்தக் கடவுள்தான் பெரியவர்' என்று கைகாட்டினால் நாம் நம்புவோம் இல்லையா?...'' என்றார் ஸ்ரீமத் ராமானுஜர்.

இப்படி ராமானுஜரே ஆசார்யராக இருந்து, நம்பி அவருக்கு சிஷ்யனான படியாலே, திருக்குறுங்குடி நம்பி இங்கே வைஷ்ணவன் என்று பெயர் பெற்றான். ராமானுஜர் அமர்ந்த சரியாஸனத்தைத்தான் நம்பியின் சன்னிதியிலே இன்றும் பார்க்கிறோம்.

**''நம் ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கும் பிரம்மராக்ஷஸை விடுவித்து, தன் திருவடி சேர்த்துக்கொள்ள வல்லவனாய் நம்பி ஸேவை சாதிக்கிறான்!''**



■ சொர்க்க வாசல்

**தி**ருக்குறுங்குடி தேவஸ்தானமோ பெரியது. இதை யார் நிர்வகிக்க? இங்கு நடக்க வேண்டிய பணிகளையெல்லாம் சரிவர யார் பார்க்க...? இந்தக் குறை தீரத் தான் பகவத் ராமானுஜர் இத்திருத்தலத்திலே சேவிக்க வந்த போது ஒரு ஜீயர் சுவாமியை ஏற்பாடு பண்ணி வைத்தார். பெரிய நம்பிகள், பெரிய திருமலை நம்பிகள், திருக்கோட்டியூர் நம்பிகள், திருமலையாண்டான், ஆழ்வார்திருவரங்கம் பெருமாள் அரையர் என்று ராமானுஜரின் ஆசாரியர்கள் ஐவர். இவர்களிலே மூத்தவர், பெரியவர், பெரிய நம்பிகள். அவர் வம்சத்திலே உதித்தவர்கள் ராமானுஜருக்கு மிக நெருக்கமானவர்கள். அந்த வம்சத்திலே ஒருவரை நியமித்து, இந்தத் திருக்குறுங்குடி சன்னிதி கைங்கர்யத்தை இனி செவ்வனே பார்த்துக் கொண்டுவர வேண்டும் என்று சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக ராமானுஜர் ஏற்படுத்தினார். அந்த மரபின்படி ஜீயர் சுவாமிகள் இன்றும் திருக்குறுங்குடியிலே இருக்கிறார். இன்று எழுந்தருளியிருக்கக்கூடிய ஜீயர் சுவாமி நாற்பத்து ஒன்பதாவது பட்டம். ஸ்ரீமத் வேதமார்க்க பிரதிஷ்டாபனாச்சார்யராய், உபயவேதாந்தாச்சார்யராய், அனந்த கல்யாணகுண பரிபூர்ணராய், பரமஹம்ஸ பரிவ்ராஜாசார்யராய் எழுந்தருளியிருக்கும் திருக்குறுங்குடி பேரருளாளர் ராமானுஜர் ஜீயர் சுவாமி. இதுதான் சுவாமியினுடைய திருநாமம்.

திருக்குறுங்குடி நம்பி - வடிவழகிய நம்பியினுடைய நித்ய கைங்கர்யத்திலேயிருந்து அவருடைய திருவாபரணங்களுக்கும் அவருடைய சகல கைங்கர்யங்களுக்கும் ஸ்ரீ பண்டாரத்துக்கும் இந்தத் திருக்குறுங்குடி நகரத்தின் செல்வத்துக்குமே உடையவராய், ஆதீனகர்த்தாவாய் எல்லாவற்றையும் நிர்வகித்து வருகிற பேரருளாளர் ராமானுஜ ஜீயர் சுவாமிகள்.

**இ**ந்த திவ்ய தேசத்து காண்டமாடு பொய்கையும் அதன் கரையில் உள்ள ஒற்றைப் பனை மரமும் திருமழிசையாழ்வாரின் பாசுரத்திலே இடம் பெற்றுள்ளன. பனை மரம் இங்கே தல விருக்ஷம்.

*'காண்ட மாடு பொய்கையும்*
*கரும்பனைப் பெரும்பழம்*



■ ஜீயர் ஸ்வாமிகள்

*புரண்டுவீழ வாளை பாய் குறுங்குடி*
*நெடுந்தகாய்'*

என்று திருமழிசையாழ்வார் வர்ணித்திருக்கிறார்.

கரண்டம் என்றால் காக்கைகள். காக்கைகள் ஆடிக்களிக்கக்கூடிய பொய்கை (குளம்)யுள் பனம்பழம் விழுகிறதாம். அவற்றைச் சாப்பிடவேண்டும் என்று, கொழுத்த வாளை மீன்கள் பாய்கின்றனவாம்.

'இப்படிப்பட்ட செழிப்போடு இருக்கிற திருக்குறுங்குடி! இந்தச் செழிப்புக்குக் காரணமாகவும் அடியார்களுடைய உள்ளத்தின் பக்திச் செழிப்புக்குக் காரணமாகவும் இருக்கிற நெடுந்தகாய்! நெடுமாலே! திரிவிக்கிரமப் பெருமானே, குறுங்குடியுள் நம்பியே!' என்கிறார்.

இந்தப் பொய்கையில் நீராடினால் பல நோய் நொடிகள் தீர்ந்து பகவத் சாயுஜ்யமாகிற மோக்ஷமே ஏற்படும்.

திருமங்கையாழ்வாரோ,

**முளைக் கதிரை, குறுங்குடியுள்**
**முகிலை, மூவா**
**மூவுலகும் கடந்து அப்பால்**
**முதலாய் நின்ற**
**அளப்பு அரிய ஆர் அமுதை அரங்கம் மேய**
**அந்தணனை, அந்தணர்-தம்**
**சிந்தையானை,**
**விளக்கு ஒளியை, மரகதத்தை,**
**திருத்தண்காவில்**
**வெஃகாவில் திருமாலைப்**
**பாடக் கேட்டு**
**வளர்த்ததனால் பயன்பெற்றேன்;**
**வருக என்று,**
**மடக்கிளியைக் கைகூப்பி**
**வணங்கினாளே...**

என்று திருநெடுந்தாண்டகத்திலே பாடுகிறார்.

ரொம்ப ஆச்சர்யமான பாசுரம். திருமங்கையாழ்வார் ஒரு கிளி வளர்த்துக் கொண்டிருந்தார். அந்தக் கிளிக்கு பகவானுடைய திருநாமங்களைச் சொல்லி வைப்பாராம். ஆழ்வார் பக்தி மேலிட பிரிவு ஆற்றாமையினால் வாடும்போதெல்லாம், கிளி பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லிச் சொல்லி அவர் வருத்தத்தைத் தணிக்குமாம்.

அளப்பரிய ஆரமுது - அவன் குறுங்குடியின் முகில். முகில் என்பது மேகம். கருத்த நிறத்தோடே மேகம் தண்ணீர் கோத்துக்கொண்டு நிற்பதைக் கண்டால் நம் மனம் குதூகலிக்கும். தானே கை தாளம் போடும். தானே கால் ஆட ஆரம்பிக்கும். நம் வாயே தானாக சங்கீதம் பாடும். மழை மேகத்தைக் கண்டால் சிறுவர் முதல் வயோதிகர் வரை எல்லோரும் எப்படி ஆனந்தப்படுவார்களோ, அதேபோல 'முளைக் கதிராம் குறுங்குடியுள் நின்ற முகிலாம்' பெருமானைக் கண்டால் நாம் ஆனந்தப்படுகிறோம்.

**(தேடுவோம்)**

வண்ணப்படம்: **ஸ்ரீஹரி**



*''மன்னா, எதிரி மன்னன் நம்மை நெருங்கிவிட்டான். நம் கதி அதோ கதிதானா?''*

*''இல்லை அமைச்சரே, சரணாகதி!!''*

*- வெ.சீதாராமன்*

# நவீன காதல்

எம்.ஜி. கன்னியப்பன்





அன்புள்ள ஜான்சன் நிகேலா
இந்தியா நலம்! லண்டன் நலமா?
நம் நான்காண்டுகால
இன்டர்நெட் காதல் வலுவடைய
சாட்டிங் வாழ்க்கை
சுகமாய் இருக்கிறது.
நீ சொன்ன நிமிடத்தில்
தாலி கட்டிக்கொண்டு
உன் மனைவியானேன்
இங்கிருந்தபடியே...
சரி, நம் வாழ்வின் சின்னமாய்
குழந்தை பெற்றுக்கொள்ள,
கொஞ்சம்
குரோமோசோம்கள் அனுப்பி வை

குற்றாலத்துக்கு இணையாக ககமளிக்கும் இன்னொரு அருவி, தமிழ்நாட்டின் தென்கோடியில் கன்னியாகுமரி மாவட்டத்தில் இருக்கிறது. அருவியின் பெயர் திற்பரப்பு. திக்கெட்டிலிருந்தும் தண்ணீர் விழுவதால் இதற்கு திற்பரப்பு என்று பெயராம். ஊர் மக்கள் காலரைத் தூக்கிவிட்டுக்கொள்கிறார்கள். கன்னியாகுமரி மாவட்டத்தில், சினிமா ஷூட்டிங் எடுத்தால், திற்பரப்பு அருவி கட்டாயம் ஒரு ஃப்ரேமிலாவது தலைகாட்டிவிடும்.

நாகர்கோயிலில் இருந்து நாற்பது கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது இந்த திற்பரப்பு அருவி. அருவியை நோக்கிச் செல்லும் பயணமே பரவசத்தை அளிக்கக்கூடியது. ஏற்ற இறக்கங்கள் கொண்ட சாலைகள். பாதைக்குக் கொஞ்சம் இடம் கொடுத்துவிட்டு, இரண்டு பக்கமும் நெடுநெடுவென வளர்ந்து நிற்கும் ரப்பர் மரங்கள். ஆங்காங்கே சின்னதும் அதைவிடச் சின்னதுமான ஆறுகள். சிலுசிலுவென வீசும் காற்று. அடடா, திற்பரப்பு பயணமே சிலாகிக்க வைக்கும்.

ஹோவென்ற ஓசை உங்கள் காதுகளை அடைந்தால், நீங்கள் திற்பரப்பு அருவியை நெருங்கிவிட்டீர்கள் என்று அர்த்தம். குதியாட்டம் போட்டுக்கொண்டு குளிக்கும் குழந்தைகள். அவர்களுக்குச் சமமாகக் குஷியாட்டம் ஆடியபடி குளிக்கும் பெற்றோர்கள். இவர்களோடு நீங்களும் மனரீதியாக ஐக்கியமாகி விடுங்கள். ஒவ்வொரு சீஸனுக்கு ஒவ்வொரு வேகத்தில் அருவி நீர் கொட்டும். மழை நாட்கள் என்றால் ஒரு வேகம். கோடை நாட்கள் என்றால் ஒரு வேகம். அருவியில் ஆசை தீர ரசித்து ரசித்துக் குளிக்கலாம்.

**▪ கலை ▪**



# சில்லென ஒரு சிற்றுலா



குளித்தது போதும் என்ற மனம் வருவதற்கே பகீரதப் பிரயத்தனம் செய்ய வேண்டியிருக்கும். துவட்டுவதற்குத் துண்டை எடுத்தவர்கள்கூட, அதே வேகத்தில் துண்டைக்

# சினிமாவில் நடிக்கும் அருவி!

கீழே வைத்துவிட்டு அருவிக்கு ஓடுவதைப் பார்க்கலாம். வெறுமனே குளியலோடு நிறுத்திக் கொள்ளாமல் அருவியிலிருந்து தண்ணீர் கொட்டு வதைப் பலவித கோணங்களில் பார்க்க முடியும். இதற்காகவே பலபேர் இற் பரப்புக்கு வருவார்கள்.

திருவாங்கூர் மன்னர்களுக்கு மிகவும் பிடித்தமான அருவி இது என்பதால், அருவி கொட்டுவதை ஒய்யாரமாக அமர்ந்துகொண்டு ரசிப்பதற்கு வசதியாக,



கல் மண்டபத்தைக் கட்டி வைத்திருக்கிறார்கள். திகட்டத் திகட்ட அருவியில் குளித்து முடித்தவர்கள், அருவிக்கு மேலே ஓடிக் கொண்டிருக்கும் கோதையாற்றில் படகுப் பயணம் செய்யலாம்.

ரப்பர் மரங்களுக்கு இடையே வளைந்து செல்லும் ஆற்றில் படகுச் சவாரி செய்வது பேரானந்தத்துக்கு முழு கியாரண்டி. அந்த ஆற்றை ரசிப்பதற்கு வசதியாகவும் ஒரு கல் மண்டபம் இருக்கிறது. அங்கிருந்தபடியே சலசலத்து ஓடும் ஆற்றை, படகுப் பயணத்தைப் பார்த்து ரசிக்கலாம்.

அருவிக்குச் செல்லவும் அச்சமாக இருக்கிறது. படகுப் பயணத்தை நினைத்தாலே பயமாக இருக்கிறது என்று சொல்பவர்களுக்கு வசதியாக, ஒரு நீச்சல் குளம் இருக்கிறது. அதில் சம்பந்தப்பட்ட ஆசாமிகள் இறங்கித் துள்ளி விளையாடலாம்; நீந்தலாம். குழந்தைகளுக்கென்றே பிரத்யேகமாக ஒரு மீன் காட்சியகம் இருக்கிறது; அதுவும் அருவிக்கு மிக அருகில். குழந்தைகளுக்குக் குதூகலம் தரும் ஏரியா இது.

**அ**ருவியில் குளியல்; ஆற்றில் படகுச் சவாரி; குளத்தில் நீச்சல். திற்பரப்பு தரும் ட்ரிப்பின் கொண்டாட்டம் முடிந்ததும் நேராக வண்டியைக் கிளப்பிக்கொண்டு நாகர்கோயிலுக்கு வரும் வழியில், வந்தனம் சொல்லி வரவேற்கிறது பத்மநாபபுரம் அரண்மனை. திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் தலைநகராக இருந்த பத்மநாபபுரத்தில் இருக்கும் அரண்மனையில் மரவேலைப்பாடுகளின் அத்தனை அம்சங்களையும் பார்க்க முடியும்; ரசிக்க முடியும். 'வருஷம் 16' படத்தில் கார்த்திக்கின் இல்லமாக இந்த அரண்மனைதான் வேடம் போட்டு நடித்திருந்தது.

பழங்காலத்துப் பளபளப்பும் பாரம்பரிய மினுமினுப்பும் கொண்ட அரண்மனையில் அசர வைக்கும் ஒரு பகுதி, உப்பரிகை. நான்கு அடுக்குகள் கொண்ட உப்பரிகையில், சித்திரங்களும் சிற்பங்களும் இரண்டறக் கலந்து எழில் கொஞ்சும். பார்ப்பவர்கள் பிரமித்துப் போய் மயக்கமடைவது சர்வநிச்சயம்.

அரண்மனைக்குள் ஒரு சுரங்கப்பாதை இருக்கிறது. ஏதேனும் ஆபத்து வந்தால் பாதுகாப்பாக மறைந்துகொள்வதற்கும், வெளியிடத்துக்குத் தப்பிச் செல்வதற்கும் இந்தச் சுரங்கப்பாதையைத்தான் மன்னர்கள் பயன்படுத்தினார்கள் என்றெல்லாம் தகவல் சொல்லி ஆச்சரியப்படுத்துகிறார்கள் அங்கிருக்கும் வழிகாட்டிகள். அவர்களுக்குத் தமிழும் பேச வருகிறது; மலையாளமும் பறைய வருகிறது; ஆங்கிலத்தையும் தொட்டுக் கொள்கிறார்கள். ஆக, மொழிப்பிரச்னை இல்லாமல் அரண்மனையை ஆற அமர பார்த்து ரசித்துவிட்டு வரலாம்.

**எ**ல்லாம் சரி, சம்பந்தப்பட்ட இடங்களுக்கு எப்படிப் போவது? என்ன செலவாகும்?

நாகர்கோயிலில் இருந்து பத்மநாப புரம் அரண்மனை செல்வதற்கு பேருந்துக் கட்டணம் ஆறு ரூபாய். அரண்மனைக்கு நுழைவுக் கட்டணம் உண்டு. பெரியவர்களுக்கு இருபத்தைந்து ரூபாய். குழந்தைகள் என்றால் பத்து ரூபாய் மட்டுமே. பத்மநாபபுரத்தில் இருந்து திற்பரப்பு செல்ல பத்து ரூபாய் கட்டணம். திற்பரப்பிலேயே தங்கிக் கொள்வதற்கு வசதியாக அறைகள் இருக்கின்றன.

உற்சாகமாகக் கிளம்புங்கள். கொண்டாட்டத்துக்குப் பஞ்சமிருக்காது!

# அருள்வாக்கு

கிளைகள், இலைகள் எல்லாம் அடர்ந்து இருக்கும் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தால், கீழே கொஞ்சம்கூட வெயில் படாமல் நிழல் இருக்கிறது. காற்று அடிக்கும்போது, இலைகள், கிளைகள் நகர்ந்து விலகுகிற சமயத்தில், சூரியனுடைய வெயில் கீழே அந்த இடைவெளி அளவுக்கு விழுகிறது. அப்புறம் மறுபடியும் அது மறைந்து விடுகிறது. அந்த மாதிரியாகத்தான், நமக்கு ஆனந்தம் அவ்வப்போது வந்து வந்து மறைந்து போகிறது. ஆனந்தம் என்பது எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும்படியான வஸ்து. ஆனால், நம்முடைய கெட்ட கர்மா, மனம், புத்தி இவற்றால் அது நம்மிடம் படாமல் மறைந்திருக்கிறது. ஒரு கணம் நாம் பண்ணியிருக்கிற புண்ணிய கர்மாக்களினாலே அவை விலகும்போது, காற்று அடித்து இலைகள் விலகும்போது சூரிய ஒளி அதன் வழியாக வருவதுபோல், நம்முடைய கர்மாக்கள் விலகியதால், எங்கும் பரவிய ஆனந்தத்தின் திவலை நமக்கு உண்டாகிறது. இதுவே வளர்ந்துவிட்டால் பேரானந்தமாகிறது. அந்த ஆனந்த சமுத்திரத்தின் லவலேசத்தைத்தான் நாம் எப்போதாவது அடைந்தவுடன் மிகவும் ஆனந்தமாக இருக்கிறோம் என்று சொல்லிக்கொள்கிறோம். தபஸ் பண்ணிப்பண்ணி விசாரம் செய்தால், எப்போதும் ஆனந்தமயமாக இருக்கும் சமுத்திரத்திலேயே கலந்து அதாகவே இருக்கலாம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



# ஆனந்தம்




இன்றைக்கு ஐம்பது வருடம் முன்னால் கம்ப்யூட்டர்கள் கொஞ்சம் பரவலாக அறிமுகமானபோதே, செயற்கை அறிவு பற்றிய ஆய்வு தொடங்கிவிட்டது. கம்ப்யூட்டரை உருவாக்கினால் மட்டும் போதாது. அது தானே சிந்தித்து முடிவெடுக்கவும் செய்ய வேண்டும். இந்த ஆர்டிஃபிசியல் இன்டலிஜென்ஸுக்கு அன்றிலிருந்து இன்றுவரை தொடர்கிறது சவால். சமாளித்து முன்னேறுகிறார்கள். நரம்பியல், மனித மூளையின் செயல்பாடு பற்றிய ஆராய்ச்சி, கணிதம், மருத்துவம்... இப்படி பல துறைகளில் ஏற்பட்ட அசுர வளர்ச்சி இந்த முன்னேற்றத்துக்கு குளுகோஸ் கொடுக்கிறது.



மனித மூளை போல, இருக்கிற தகவலை வைத்துக்கொண்டு அடுத்ததாக என்ன செய்ய வேண்டும் என்று கம்ப்யூட்டர் தீர்மானிக்க வேண்டும். நிபுணர் ரேஞ்சில் எல்லாம் சிந்திக்க வேண்டாம். புதுசாக கிரிக்கெட் விளையாடக் கற்றுக்கொண்ட, ஐந்து வயதுப் பையன் போல் யோசிக்க முடிந்தால் போதும். செயற்கை அறிவின் முதல்படி இது. சிக்கல் இங்கேதான். குட்டிப் பையனுக்கு சாக்லெட் கொடுத்து 'பறவை படம் போடு' என்றால், காக்கா படம் போடுவான். அல்லது முந்தாநாள் அப்பாவோடு வண்டலூர் உயிரியல் பூங்காவில் பார்த்துவிட்டு வந்த நெருப்புக் கோழியைக்கூட வரையலாம். பறக்கும் காக்கையும், பறக்கத் தெரியாத நெருப்புக் கோழியும் பறவை இனம்தான் என்று பார்த்தும், கேட்டும் அறிந்துகொண்ட அறிவு இது. தீயைத் தொட்டால் சுடும். லட்டு இனிக்கும். இப்படி சின்னக் குழந்தை மூளையில் ஏகப்பட்ட விஷயம் பதிவாகி இருக்கும். தேவையான சமயத்தில் உடனே நினைவும் வரும். கம்ப்யூட்டருக்கு இப்படியாக அறிவு புகட்டுவது சிரமம்.



ஆனாலும், புகட்ட ஆரம்பித்தார்கள் அறிவியல் நிபுணர்கள். மனிதன் பேசுவதில் ஒரு சில வார்த்தைகளையாவது புரிந்துகொண்டு, என்ன புரிந்ததோ அதே படிக்கு இயங்கும் ரோபோக்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. ஐந்து நிமிடம் வளவளவென்று பேச்சுக்கு நடுவே



# சிலிகான்



'இங்கே வா' என்று சொன்னது மட்டும் ரோபோவுக்குப் புரிந்து அது நகரும்.

நகர்ந்தால் மட்டும் போதுமா? பக்கத்தில் இருக்கும் சுவர் மீது இடித்துக் கொள்ளாமல், குறுக்கே கிடக்கும் பத்திரிகையை மிதிக்காமல் நடக்க வேண்டும். சுற்றுப்புறத்தை, சூழ்நிலையை வைத்து அடுத்த அடி எடுக்க வேண்டும். இதுவும் ரோபோவின் கம்ப்யூட்டர் மூளைக்கு அடுத்து கைவந்தது. சுவர் இருப்பதைப் புரிந்துகொண்டு சுற்றிப் போக முடிந்தாலும், எதிரே வருவது சிங்கமோ புலியோ என்றால், வந்த வழியில் திரும்பி ஓட வேண்டும். நாமாக இருந்தால், உடனே செய்வோம். கம்ப்யூட்டருக்குப் பயத்தை எப்படிக் கற்றுக்கொடுப்பது? பயம் மட்டுமில்லை. நவரசத் திலகமாக யாராவது முகத்தில் உணர்ச்சி காட்டினால் புரிந்துகொள்வது, அதற்குத் தக்கபடி நடப்பது இதெல்லாம்கூட கம்ப்யூட்டருக்கான செயற்கை அறிவுத் தகவலாக்கப் பட வேண்டும். படுகிறது.

பங்கு வர்த்தக நிலைமையை ஆராய்ந்து ஷேர் மார்க்கெட்டில் முதலீடு செய்ய வேண்டுமா? செயற்கை அறிவுகொண்ட மேதமை அமைப்புகள் இதற்காக ஏராளமாக உள்ளன. அலுப்புத் தட்டாமல் ஒரே வேலையை மணிக்கணக்காக, நாள் கணக்காக நிறுத்தாமல் செய்ய, அபாயமான சூழ்நிலைகளில் இயங்க செயற்கை மூளை அமைப்புகள் உண்டு. மருத்துவப் பரிசோதனை செய்யும் ரோபோவில் இருந்து துணி துவைத்து உலர்த்த வரை ஏ.ஐ. (A.I.) பெருவாரியான உபயோகத்தில் வந்துவிட்டது. உலகத்தில், இப்போது புழக்கத்தில் இருக்கும் இப்படியான ரோபோக்களை இலவச டீ.வி போல் வழங்கினால், சென்னையில் ஒரு குடும்பத்துக்கு ஒரு ரோபோ கிடைக்கும். அதில் பாதிக்கு மேல் ஜப்பானில் இருந்து வரவழைத்ததாக இருக்கும்.

இன்னும் இருபது வருடத்தில் கம்ப்யூட்டர் அச்சு அசலாக மனித மூளை போல் சிந்திக்க ஆரம்பித்து விடும் என்று அறிவியல் ஆருடம் சொல்லப்படுகிறது. ஏ.ஐ பற்றிய இந்தக் கட்டுரையை 2028-ல் தொடர உத்தேசம். அப்போது எனக்காகக் காத்திருக்காமல், என் கம்ப்யூட்டரே அதை எழுதி விடலாம்!



# மூளைகள்!

"இந்தோனேஷியாவின் தலைநகரான ஜாகர்தாவில் கலாசாரத் துறை அமைச்சருடைய பேட்டியைப் படம் பிடித்துக்கொண்டிருந்தோம். இட்டமிட்டபடி பேட்டி முடிந்து மூன்று மணி நேரத்தில் ஜோக் ஜாகர்தா என்ற நகரத்துக்குச் செல்ல விமானம் ஏற வேண்டும். ஆனால், மிகக் கடுமையான போக்குவரத்து நெரிசலில் சிக்கிக்கொண்டோம். விமான நிலையத்திலிருந்து எங்கள் டிராவல் ஏஜென்ட் ஃபோன் செய்து 'நேரமாகிக் கொண்டிருக்கிறது! எப்படியாவது சீக்கிரம் விமான நிலையம் வந்து சேருங்கள்' என

● எஸ்.கிருஷ்ண ஸ்வாமி



● படப்பிடிப்புக் குழு

அவசரப்படுத்திக்கொண்டிருந்தார். ஒரு வழியாக விமானத்தின் புறப்பாடு நேரத்துக்கு பதினைந்து நிமிடம் தாமதமாக விமான நிலையத்தை அடைந்தோம். எங்களுடைய டிராவல் ஏஜென்ட், 'ஓடி வாருங்கள்! உங்களுக்காக விமானத்தை நிறுத்தி வைத்திருக்கிறேன். நீங்கள் அனைவரும் நேரே விமானத்துக்குள் செல்லுங்கள். உங்கள் லக்கேஜ்களை விமானத்தில் ஏற்ற ஏற்பாடு செய்துவிட்டேன்' என்றார். ஓடிப்போய் விமானமேறி, எங்கள் இருக்கைகளில் அமர்ந்த மறு வினாடி விமானம் புறப்பட்டது'' என்று டென்ஷனான இந்தோனேஷிய அனுபவத்தை நினைவு கூறுகிறார்கள் பிரபல டாக்குமென்டரி பட இயக்குநர், தயாரிப்பாளரான டாக்டர் எஸ்.கிருஷ்ணஸ்வாமியும் அவரது மனைவி மோகனா கிருஷ்ணஸ்வாமியும்.

இவர்கள் தூர்தர்ஷனுக்காக இயக்கி, தயாரித்துள்ள டாக்குமென்டரி தொடர் 'இந்தியன் இம்பிரின்ட்' இந்தோனேஷியா, தாய்லாந்து, கம்போடியா, லாவோஸ் மற்றும் வியட்நாம் ஆகிய நாடுகளில் இந்திய கலாசாரத்தின் தாக்கம் பற்றி எடுத்துச் சொல்லும் இந்த டாக்குமென்டரி தொடர், ஏப்ரல் முதல் வாரம் முதல், ஞாயிறுதோறும் தூர்தர்ஷனில் 18 பகுதிகளாக ஒளிபரப்பாகிவருகிறது. முன் கூறிய ஐந்து நாடுகளில் உள்ள நூறுக்கும் அதிகமான பழம்பெருமை மிகுந்த கோயில்கள், நினைவுச் சின்னங்கள் படம்பிடிக்கப்பட்டுள்ளன. அந்த நாடுகளின் முக்கியமான கலாசாரக் காவலர்களைச் சந்தித்து பேட்டி கண்டிருக்கிறார் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி.

இந்த டாக்குமென்டரி தயாரிப்பின் போது கிருஷ்ணஸ்வாமி குழுவினர் சந்தித்த சவால்கள் ஏராளம். ''சென்னை



யிலிருந்து இரவு இந்தோனேஷியாவுக்கு எங்கள் படப்பிடிப்புக் குழு புறப்பட்டாக வேண்டும். ஆனால், நாங்கள் இந்த டாக்குமென்டரியை எடுப்பதற்காகவே பிரத்யேகமாக சிங்கப்பூரிலிருந்து இறக்குமதி செய்திருந்த உயர்ரக தொழில் நுட்ப



# நடன ஒத்திகையில் ராஜகுமாரி!



கேமரா, அன்று காலை வரை கைக்கு வந்து சேரவில்லை. ஒரு வழியாக பிற்பகலில் கேமராவும், இதர உபகரணங்களும் வந்து சேர, மது அம்பட், அவை அனைத்தையும் பிரித்து, எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று தெரிந்து கொண்டார்.

இந்தோனேஷியாவில் ஜோக் ஜாகர்தா என்ற நகரில் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூன்று தெய்வங்களுக்கும் ஒரே இடத்தில் கோயில் உள்ளது. அங்கே ஒரு நாள் படப்பிடிப்பை மட்டும் முடித்துக்கொண்டு, சுமார் 100 கி.மீ. தூரத்தில் ஓர் இடத்தில் இரவு தங்குவதற்குச் சென்று விட்டோம். மறுநாள் கடும் பூகம்பம் ஏற்பட்டு, எங்கு பார்த்தாலும் அழுகையும் ஓலமும் தான். எங்கள் வாகனங்களை ஓட்டி வந்த உள்ளூர் டிரைவர்கள், 'எங்கள் குடும்பத்தினருக்கு என்ன ஆயிற்றோ தெரியவில்லை; வீட்டுக்குப் போய் அவர்களை உடனே பார்க்க வேண்டும்' என்று சொல்லி எங்களையெல்லாம் நடு வழியில் லக்கேஜ்களுடன் இறக்கி விட்டு விட்டுப் போய்விட்டார்கள்.

வியட்நாமின் ஹோசிமின் நகரத்திலிருந்து விமானம் ஏறி நாங்கள் அனைவரும் கம்போடியா வந்துவிட்டோம். ஆனால், எங்கள் பெட்டிகளும், கேமரா முதலிய உபகரணங்களும் மறுநாள்தான் வந்து சேர்ந்தன.

**க**ம்போடியா நாட்டின் அரசகுமாரியைப் பேட்டி காண பெரும் முயற்சி செய்தும் அவரது அப்பாயின்ட்மெண்ட் கிடைக்கவில்லை. கம்போடியாவின் அரண்மனையில் சில காட்சிகளைப் படம் பிடிக்க அனுமதி கிடைத்தது. அரண்மனைக்குச் சென்றபோது, அங்கே நடந்துகொண்டிருந்த நடன ஒத்திகையையும் படம்பிடித்துக்கொண்டோம். எதேச்சையாக, அந்த நடன ஒத்திகையை நடத்திக்கொண்டிருந்த பெண்தான் அரசகுமாரி என்று தெரியவந்தபோது, எங்களுக்கு இனிய ஆச்சர்யம்! அவரைத் தயக்கத்துடன் அணுகி, 'சில நிமிடங்கள் எங்களுக்காக ஒதுக்கி பேட்டி தர முடியுமா?' என்று கேட்டபோது, மகிழ்ச்சியில் சம்மதித்தார்'' என்கிறார்கள் கிருஷ்ணஸ்வாமியும், மோகனா கிருஷ்ணஸ்வாமியும்.



**சந்திப்பு: கௌதம் ராம்**

ஜேஜே படத்தில் கதாநாயகியாக நடித்தவர் அமோகா. இந்தியில் சில காலம் நடித்துக் கொண்டிருந்தவர் இப்போது மீண்டும் தமிழுக்கு நடிக்க வருகிறார். ஆச்சர்யம், இவருடைய முதல் கதாநாயகன் மட்டுமல்ல, இவரைத் தமிழுக்கு அழைத்து வந்ததும் நடிகர் மாதவன்தான்.

"என்னோட உண்மையான பேர் ப்ரியங்கா. 'ஜேஜே'வுக்காக அமோகானு மாத்தினேன். ராம் கோபால் வர்மாவோட ஜேமஸ்ல நடிச்சதிலிருந்து நிஷா கோத்தாரியா மாறிட்டேன். அப்போ நான் சினிமாவுல வாய்ப்புத் தேடி தீவிரமா போராடிட்டு இருந்தேன். மாதவன் ஒரு விளம்பரப் படத்துக்காக மும்பையில் இருந்தார். அவர் நடிக்கப்போற படத்துக்காக கதாநாயகியைத் தேடறாங்கன்னு தகவல் வந்து; அவரைப் பார்க்கப் போனேன்; என் ஆல்பத்தைக் கொடுத்தேன். அவர் உடனே இயக்குநர் சரணுக்குப் ஃபோன் செஞ்சு, சார் ஹீரோயின் கிடைச்சுட்டாங்கன்னு சொன்னார். அப்புறம் தெலுங்குலயும் இந்திலயும் வாய்ப்புகள் வந்தது. ராம்கோபால் வர்மா போன்ற இந்தி இயக்குநர்கள், சாதாரண நடிகர் நடிகைகளை பெரிய நட்சத்திரமாக்கிக் காண்பிக்கறாங்க. நானும் அப்படி நட்சத்திரமானவதான். இப்போ மறுபடியும் தமிழ்ல நடிக்க ஆசை வந்தது; தயாராயிட்டேன்.

'முதல்ல நான் தமிழ்ல நடிக்கும்போது அவ்வளவு பயமா இருந்துச்சு. நடிப்பும் புதுசு; மொழியும் புதுசு. ஆனா மாதவன் நிறைய தைரியம் கொடுத்தார். ஷூட்டிங் ஆரம்பிப்பதற்கு முன்னாடி, எனக்கான அலங்கார







# ''சார், ஹீரோயின் கிடைச்சுட்டாங்க!''



உடைகளை அணிஞ்சு கண்ணாடி முன்னாடி நிக்கும்போது, நான் தேவதையா தெரியறேன்'' என்று கனவுகளை நனவாக்கிய சந்தோஷத்தில் பேசிய அமோனா ஒரு தீவிரமான ரஜினி ரசிகை.

''ரஜினி படம்ங்கிறதால சிவாஜி பார்த்தேன். தமிழ் சினிமாவுல எனக்குப் பிடிச்ச ஹீரோன்னா அது ரஜினிதான். அவர் என்னைக்கும் இளமையாதான் இருக்கார்.''

- செந்தில்



## பெரியவர்கள்!

**ச**ங்கரன் வீட்டு வாசலில் வந்து நின்றவர் கேட்டார்.

"சார்! இங்கே பரசுராமன்ங்கிறவர் வீடு எது?"

"பரசுராமனா? யார்னு தெரியலையே!" சங்கரன் யோசித்தார். வீடு விசாரித்தவரின் அருகில் இருந்த பெண்மணி அவரது மனைவியாக இருக்க வேண்டும்.

"அவரோட வொய்ஃப் பேர் பத்மாவதி..." என்று இழுத்தார். "பத்மாவதின்னு யாரையும் கேள்விப்பட்டதில்லையே." சங்கரனின் மனைவி பார்வதி பதில் கூறினாள்.

முகவரி விசாரித்த தம்பதியின் குட்டிப் பெண் பேசினாள், "அக்ஷயான்னு ஒரு பொண்ணுகூட இருப்பாளே?"

"அக்ஷயா வீடா? எங்க பக்கத்து வீடுதான். நானும் அவளும் க்ளோஸ் ஃப்ரெண்ட்ஸ்... வா... கூட்டிட்டுப் போறேன். உன் பேர் என்ன? எந்த கிளாஸ் படிக்கிறே?" என்று உற்சாகமாய் சங்கரன் - பார்வதி தம்பதியின் சின்னப் பெண் ஸ்ருதி, அந்தக் குட்டிப் பெண்ணின் கைபிடித்து அழைத்துப் போனாள். பெரியவர்கள் பேசவில்லை.

- **ஆர்.ராஜலட்சுமி**



## சமத்துவம்

**வீ**ட்டின் உள்ளே டைனிங் டேபிளில் தம் மகன் கண்ணனுடன் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த தோட்டக்காரன் மகன் முத்துவைக் கண்டு ஆத்திரத்தில் கொதித்துப் போனார் ராமசாமி. முத்துவைத் தரதரவென்று இழுத்து வெளியே தள்ளிவிட்டு, "அறிவுகெட்ட முண்டம்... தோட்டக்காரன் மகனுடன் சரி சமமாகவா சாப்பிடறது?" என்று கேட்டு, கன்னத்தில் பளார் என்று ஓர் அறை விட்டார்.

வலி தாங்காமல் அழுதபடியே கண்ணன், "எம்பா என்னை அடிக்கறே? சுதந்திர தினத்தன்று கோயிலில் நடந்த சமபந்தி போஜனத்தில் முத்துவோட அப்பாகூடத்தானே நீ சாப்பிட்டே. உன்னைக் கூட கலெக்டர் பாராட்டிப் பேசினாரே. அதையே நான் செய்தால் இப்படி அடிக்கிறாயே?" என்றான். அதிர்ந்து நின்றார் ராமசாமி. அவர் நெஞ்சை வலிக்கச் செய்தது அவன் கேள்வி.

- *லலிதா செல்லப்பா*

'இன்று என்னுயிர் காதலிக்குத் திருமணம். இரு வீட்டிலும் எங்கள் காதலுக்கு அங்கீகாரம் கிடைத்த பிறகும் ஏன் இப்படி முடிவெடுத்தாள் நயவஞ்சகி! விடமாட்டேன்' ஆத்திரத்தில் தனக்குத்தானே ரவி பேசிக்கொண்டிருந்த வேளையில்,

''சார் போஸ்ட்!''

வந்த தபாலை வாங்கிக் கிழித்தான். அதில் காதலி மீனாவின் கையெழுத்து. படிக்க ஆரம்பித்தான்.

## காதலி கடிதம்



'ரவி, என்னுடைய திருமண முடிவு உங்களுக்கு அதிர்ச்சியாக இருக்கும். ஆனால், இந்த முடிவு எடுக்க நீங்கள்தான் காரணம்! நம் காதலுக்கு வயது ஐந்து. வேலைக்கும் செல்லாமல், குடும்பப் பொறுப்பையும் ஏற்காமல் ஊர் சுற்றும் உங்களுக்குப் பல முறை அறிவுரையும், ஆலோசனையும் சொல்லியும் நீங்கள் கேட்கவில்லை. என்னையே பார்த்துக்கொண்டேயிருக்க வேண்டும் போலிருக்குன்னு டயலாக் பேசினீர்கள். திருமணத்துக்குப் பின்னும் நீங்கள் இதுபோலிருந்தால், என் கதி? உங்களுக்கு வாழ்க்கைப் பாடம் கற்றுக் கொடுக்கவே, உங்களை விட்டு விலக முடிவெடுத்தேன். என்னை இழந்தது போல, பொறுப்பின்மையால் உங்கள் குடும்பத்தையும் இழந்துவிடாதீர்கள். இப்படிக்கு மீனா.'

## திருப்பம்

''என்ன மாணிக்கம் கவலையோடு இருக்கே?'' கேட்டபடியே வந்தார் ஜெகன்.

''ஒண்ணுமில்லை...''

''முப்பத்தைந்து வருஷங்களா நண்பர்களா பழகறோமே... எங்கிட்ட சொல்லக் கூடாதா?''

''என் மகள் புவனா காலேஜ்ல கூட படிக்கற ஒருத்தனை லவ் பண்றாளாம்!''

''அட... இதென்ன நம்ம காலமா? இது கணினி காலம்பா! பையனை விசாரி... நல்லவனாயிருந்தா பெத்தவங்ககிட்ட போய்ப் பேசி, சட்டுபுட்டுன்னு முடிச்சுடுப்பா. நம்ம புள்ளையோட ஆசைதான் முக்கியம். அவசரப்பட்டு சிறுசுங்களைப் பிரிச்சு, அந்தப் பாவத்தைக் கொட்டிடாதேப்பா. ரெண்டு பேரும் காதல்ல உறுதியா இருந்தா நகை, புடவை, கல்யாணச் செலவெல்லாம்கூட பையன் தலையில கட்டிடலாம். என்ன சொல்றே?''

''சரி... அப்படின்னா, என் மகள் காதலிக்கிற உன் பையன் பாபுவை, என் வீட்டுக்கு எப்ப நீ பெண் பார்க்கக் கூட்டிட்டு வர்றே?''

இப்போது ஜெகனுக்கு அதிர்ச்சியில் தலையே சுற்றுவது போலிருந்தது.

- வெ.ராம்குமார்





● பாலமுரளிவர்மன்

# சேனல்

''சந்தனக்காடு தொடரை இயக்குவதற்கு நான் தமிழன் என்ற காரணத்தைத் தவிர வேறெந்தக் காரணமும் இல்லை. நான் பேசும் மொழியைப் பேசும் மக்கள், எனது சொந்தங்கள், எனது இனம் சிதைக்கப்பட்டபோது எனக்கு ஏற்பட்ட வலியையும், கோபத்தையும் வேதனையையும் பதிவு செய்திருக்கிறேன். நான் திரைப்படத்திலும், தொடர்களிலும் இயக்குநராக இருப்பதால், எனக்குத் தெரிந்த இந்த ஊடகத்தில், தொடராகத் தந்துள்ளேன்'' என்கிறார் அதன் இயக்குநர் வ.கௌதமன்.

''பெண்களை மையமாக வைத்து, கமர்ஷியலாகத் தொடர்கள் வெளிவரும் இந்தக் காலத்தில், மக்களின் வாழ்வைப் படமாக்க எண்ணினேன். அந்த முயற்சியின் வெற்றிதான் இந்த சந்தனக்காடு. சந்தனக்காட்டில் நடந்த அதிரடிப்படையினரின் அத்துமீறல்கள் எல்லாமே வீரப்பன் தேடுதல் வேட்டை என்ற பெயரில்தான் நிகழ்ந்தன.

வீரப்பனின் சாகசங்களை மட்டும் காட்டாமல் கர்நாடக - தமிழக அதிரடிப் படையினரால் பாதிக்கப்பட்ட மக்களை நேரில் சந்தித்து, அவர்களின் வாக்குமூலங்களைப் பதிவுசெய்து, தொடரின் இறுதியில் ஒளிபரப்பி வருகிறோம். இம்மக்கள், அதிரடிப்படையினரால் தமக்கு நேர்ந்த அட்டூழியங்களை கேமரா முன்னால் பகிர்ந்துகொள்ளும்போது, எங்கள் படப்பிடிப்பு குழுவினரின் கண்களில் கண்ணீர் வருகிறது.

இந்தக் கொடூரங்களின் உச்சகட்டம், கர்நாடக அதிரடிப் படையினரால் அரங்கேற்றப்பட்ட 'வொர்க்ஷாப்' சித்ரவதைகள்தான். மாதேஸ்வரன் மலையில் இருந்த பழமையான கட்டிடத்தை வொர்க் ஷாப் என்று பெயர் மாற்றி, வீரப்பன் தேடுதல் வேட்டையின் போது, சிக்கிய அப்பாவி மலைவாழ் மக்களை ஆண்கள், பெண்கள் என்ற வித்தியாசம் இல்லாமல், ஒரே அறையில் நிர்வாணமாக பல நாட்கள் சித்ரவதை செய்திருக்கிறார்கள். இந்தச் சித்ரவதையில் எத்தனையோ பேர் செத்திருக்கிறார்கள். எத்தனையோ சிறுமிகள் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டிருக்கிறார்கள். இந்த 'வொர்க்ஷாப்' காட்சிகளைப் படமாக்கும்போது நாகரிகம் கருதி, ஆடையுடன் படமாக்கினோம்.

அதிரடிப்படையினரால் பாதிப்படைந்த இம்மக்களுக்கு, நீதிபதி 'சதாசிவ கமிஷன்' நிவாரணத் தொகை வழங்க உத்தரவிட்டும், கர்நாடக அரசு நிவாரணம் வழங்க மறுக்கிறது.

இம்மக்களுக்கு நிதி மட்டும் போதாது; நீதியும் வேண்டும். இதுபோன்ற அட்டூழியங்களை நிகழ்த்திய அதிகாரிகளுக்கு உரிய தண்டனை கிடைக்க வேண்டும். இதுவே இப்பகுதி மக்களின் உணர்வாக இருந்ததை 'சந்தனக்காடு' படப்பிடிப்பின் போது உணர முடிந்தது'' என்று கூறும் இவர், 'கனவே கலையாதே' என்ற திரைப்படத்தையும் இயக்கியுள்ளார். நீல.பத்மநாபனின் சாகித்ய அகாடமி விருது பெற்ற நாவலை திரைப்படமாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

**வீ**ரப்பனாக நடிக்கும் ராஜா, 'விருமாண்டி'யில் அறிமுகமாகி, 'கில்லி'யில் பளிச்சென்று தெரிந்தவர். செம்பரத்துக்காரர். ''எனக்கு இந்த வாய்ப்புக் கிடைத்

# சந்தனக்காட்டின்

ததே மிகப்பெரிய அதிர்ஷ்டம்தான். எத்த னையோ பேரைப் பார்த்து விட்டு, கடைசியில்தான் என்னைத் தேர்வு செய்தார் இயக்குநர். என்னைத் தேர்வு செய்த இயக்குநர் கௌதமனுக் கும், அதை ஓ.கே. செய்த மருத்துவர் ராம தாசுக்கும் நன்றி சொல்ல வேண்டும்'' என்கிறார் ராஜா.

சந்தனக்காடு தொடரில் கள ஆய்வா ளராகவும், வசனகர்த்தாவாகவும் இருப் பவர் பாலமுரளிவர்மன்.

அவர் கூறுகையில்...

''இந்தத் தொடரில் எந்தவித கற்ப னையையோ, தேவையற்ற அம்சங் களையோ சேர்க்கவில்லை. கள ஆய்வில்







நான் சந்தித்த தகவல்களை உணர்வுபூர்வ மாகத் தந்திருக்கிறேன். தகவல் தொழில் நுட்பத்துறையில் பிரம்மாண்டமான வளர்ச்சி, சிறந்த போக்குவரத்து வசதி கள்... என, தமிழ்நாடு வெளியில் பார்ப்ப தற்குப் பளபளப்பாக இருந்தாலும், சந்தனக்காடு என்று வெளியில் தெரியாத சோகம் இருப்பதை மக்களிடம் உணர்த்து வதே எங்கள் பணி.



• வ. கௌதமன்

தொடரில் வரும் வசனங்கள் இம்மக்களோடு பழகி, அவர்களின் வலியையும் வேதனை யையும் உணர்ந்து எழுதியவை. இத்தொடரைப் பார்த்த பிறகாவது சமூக விழிப்புணர்வு வரவேண்டும்.''

– ராகவ் குமார்

விழிப்புணர்வு முயற்சியா அல்லது வீரப்பனை ஹீரோவாக்கும் விபரீத முயற்சியா? என்று இத்தொடர் குறித்து குற்றம்சாட்ட இடமிருக்கிறது. வாசகர் களை விவாதிக்க அழைக்கிறோம். அஞ்சலட்டையில் 'சந்தனக்காடு சர்ச்சை' என்று குறிப்பிட்டு, உங்கள் கருத்தை 22.5.2008க்கு முன் அனுப்புங் கள்.

– ஆர்

# அழுகை...!



''அவர் ஒரு போலி டாக்டர்னு எதை வைச்சு சொல்றீங்க?''

''எல்லா டாக்டர்களும் 'ஆன்ட்டி பயாடிக்' மருந்துதான் தருவாங்க. நான் அங்க்கிள் பயாடிக் மருந்து தரேன்னு சொல்றாராமே!''

– சீர்காழி புவனா சாமா

# ''அஸ்கு புஸ்கு நீதான் ஸ்ரீசாந்த்!''

''நீதான் ஸ்ரீசாந்தாம்; நான்தான் ஹர்பஜனாம்.''

''அஸ்கு புஸ்கு! நான்தான் ஹர்பஜன், நீதான் ஸ்ரீசாந்த்!''

– சீர்காழி வி.ரேவதி






''யோவ்... இது ஆஸ்பத்திரி. இங்க வந்து பிச்சை எடுக்கிறியே?''

''தர்மாஸ்பத்திரின்னு சொன்னாங்க எஜமான். அதான் அஞ்சு, பத்து தர்மம் கிடைக்கும்னு வந்தேங்க.''

– குருவை ஆர்.தேவிகா

''பிற்படுத்தப் பட்டோருக்கு 27% ஒதுக்கீடு கிடைச்சதைப் பற்றி தலைவர் என்ன சொல்றாரு?''

''35% கிடைச்சிருந்தா பாஸாகி இருக்கலாம்னு சொல்றார்!''

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்




''என்ன சார், ஹோட்டலுக்கு வந்துட்டு எதுவுமே சாப்பிடாம போறீங்க?''

''பின்னே என்னப்பா, 'இன்றைய ஸ்பெஷல்'னு எழுதிட்டுக் கடைசியா 'வீட்டுச் சாப்பாடு போல்'னு எழுதியிருக்கீங்க...?''

- திருவாரூர் ராமு

''கர்ப்ப ஸ்திரீகளையெல்லாம் நேரடியா சந்திக்கிற மெகா திட்டம் வைச்சிருக்காராமே தலைவர்?''

''கட்சியில விரைவில் மழலையர் அணியை ஆரம்பிக்கப் போறாராமே!''

- பி.ஜி.பி. இசக்கி



# சியர் கேர்ள்ஸ் -ரைட்டா...

சென்னையில் நடைபெற்று வரும் 20-20 கிரிக்கெட் போட்டி இளசு முதல் பெரிசுகள் வரை அனைவரது மனத்தையும் கவர்ந்திருந்தாலும், 'உற்சாகப்படுத்துகிறோம்' என்ற நோக்கில் ஈர்ப்பு ஆடையோடு கவர்ச்சி ஆட்டம் போடும் சியர்கேர்ள்ஸ் பலரது முகத்தையும் சுளிக்க வைத்திருக்கிறார்கள். இவர்கள் பற்றி என்ன நினைக்கிறார்கள் கல்லூரி மாணவர்கள். அறிந்துகொள்ள களத்தில் இறங்கினோம்...



● ராதிகா

**பாலாஜி:** (பாலி டெக்னிக் கல்லூரி - தெள்ளாறு)

ஃபேஷன் டீவி, ஸ்டார் மூவிஸ் போன்ற மேற்கத்திய சேனல்களைக் காட்டிலும் சியர் கேர்ள்ஸ் ஆடைகள் ஒன்றும் தரக்குறைவாக இல்லை. இன்டர்நேஷனல் அளவுக்கு ஈடாக நடக்கும் 20-20 கிரிக்கெட் போட்டி சென்னையில் நடப்பதே பெரிய விஷயம். கிரிக்கெட் என்றால், 20-20தான். அதை விட்டுவிட்டு சியர் கேர்ள்ஸ் விவகாரத்தைப் பெரிதாக எடுத்துக்கொள்ளத் தேவையில்லை.



● ஜான் வசந்தகுமார்

**ராதிகா:** (தெய்வானையம்மாள் ஆர்ட்ஸ் அண்ட் சயின்ஸ் காலேஜ், விழுப்புரம்)

கிரிக்கெட் இன்று உலகத்துக்கான விளையாட்டாக மாறிவருகிறது. அதுவும் 20-20 கிரிக்கெட் போட்டி, அதிரடியான அழகான மாற்றம். இனி கிரிக்கெட் என்றால் 20-20தான். மேலும், கிரிக்கெட்டைத்தான் வயது வித்தியாசமில்லாமல் அனைத்துத் தரப்பினரும் ரசிக்கின்றனர். இதில் ஆபாச உடையணிந்து சியர் கேர்ள்ஸ் ஆடுவது அவசிய மற்றது.



● சரவணன்



**சரண்யா:** கிரிக்கெட்டின் இடையில் சியர் கேர்ள்ஸ் ஆடும் ஆபாச ஆட்டத்தை அனுமதிக்கக் கூடாது. இந்த நிகழ்வு கிரிக்கெட் விளையாட்டின் மீதே தவறான

# ராங்கா...?



எண்ணத்தை உருவாக்கிவிடும். குடும்பத்தோடு உட்கார்ந்து டி.வி.யில் மேட்ச் பார்க்கும்போது இதுபோன்ற ஆபாச ஆட்டங்கள் ஒவ்வொருவர் மனத்திலும் சங்கடத்தை உண்டாக்கும்.

**ஜான் வசந்தகுமார் :** *(மாதா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சென்னை)*

எந்தவொரு புது விஷயம் நடைமுறைக்கு வந்தாலும் அதைக் கண்மூடித் தனமாக எதிர்ப்பது என்பது இங்கே ஒரு சிலருக்கு வழக்கம். ஆபாசம் என்பவர்கள் சியர் கேர்ள்ஸ் ஆட்டத்தைப் பார்க்காமல், கிரிக்கெட் ஆட்டத்தை மட்டும் பார்க்க வேண்டியதுதானே. அதைச் செய்ய மாட்டார்கள். விளையாட்டை விளையாட்டாய்ப் பாருங்கள். ஆபாசமாகப் பார்க்காதீர்கள்.



● சரண்யா

**சரவணன்:** வெறெந்த ஊரில் சியர் கேர்ள்ஸின் ஆட்டத்தை அனுமதித்தாலும், சென்னை போன்ற கலாசார நகரங்களில் அனுமதிக்கக் கூடாது. ஏற்கெனவே கிரிக்கெட் மீது ஊழல் போன்ற ஏகப்பட்ட புகார்கள் இருக்கின்றன. மேலும் ஒரு பிரச்னை வேண்டுமா? இதுபோன்ற ஆட்டங்கள் கிரிக்கெட்டின் பெயரை மட்டுமல்ல, சென்னையின் பெயரையும் கெடுத்துவிடும்.



● பாலாஜி



● ஆனந்தராஜ்

**ஆனந்தராஜ் :** மாறி வரும் உலகச் சூழலுக்கு ஏற்ப நாமும் மாற வேண்டும். சியர் கேர்ள்ஸின் ஆட்டத்தைக் கண்டிப்பவர்கள் மனசாட்சி உள்ளவர்கள் எனில், ஒவ்வொரு தமிழ்ப் படத்திலும் கதாநாயகிகள் அரை குறை உடையோடு போடும் ஆட்டத்தையும் கண்டிக்க வேண்டும். ஏன் இரட்டை வேடம் போட வேண்டும்?

**– ராகவ்குமார்**





ராக்கி சாவந்த் •

**சா**லைகளைக் கடக்கும்போது, பச்சை விளக்கை எதிர்பார்த்துக் காத்திருக்கும் அனுபவம் அனைவருக்குமே உண்டு. விளக்கில் தெரியும் உருவத்தைக் கவனித்திருக்கிறீர்களா?

அதில் ஆண் உருவம் மட்டுமா? ஆண், பெண் இரண்டு உருவங்களும் விளக்கில் தெரிய வேண்டும் என்று ஸ்வீடன் அரசாங்கம் நெடுஞ் சாலைத் துறைக்கு உத்தரவிட்டிருக்கிறது.

'**சா**லை விளக்கு புரட்சி'யை நிராகரிப்பது போல் சிலி நாட்டு மேயர் ஒருவர் ஐடியா பண்ணி காலரை உயர்த்திக்கொண்டிருக்கிறார்.

தென்சாந்தியாகோ பகுதியின் பின்தங்கிய லோ ப்ரோடே நகரத்தின் மேயரான கான்சலோ நாவ ராட், அறுபது வயதைத் தாண்டியவர்கள் அனை வருக்கும் மாதம்தோறும் நான்கு வயாக்ரா மாத் திரைகள் இலவசம் என்று சொல்லியிருக்கிறார்!

ஓய்வுபெற்றவர்கள் உற்சாகமாக இருப்பார்களே என்றால் அதுதான் இல்லை. 'நாலே நாலுதானா?' என்று வருத்தப்படுகிறார்களாம்!

**சி**லிநாட்டு மேயர் சந்தோஷப் படுத்துகிறார் என்றால், சீன நாட்டு மேயர் ஒருவர் சங்கடப்படுத்திக் கொண்டிருக்கிறார். வட சீனத்தின் டையன்ஜின் நகர விமான நிலை யத்தில், இரண்டு மில்லியன் யான் செலவு செய்து ஒரு பறவை சிலையை உருவாக்கியிருக்கிறார் கள். அதைச் செய்து முடிப் பதற்கு இரண்டு வருஷங்கள் ஆகியிருக்கின்றன. எல்லா வேலைகளும் முடிந்து, திறப்பு விழாவுக்கு நாளும் கூட குறித்தாகிவிட்டது.



அதற்கு முன்னால் 'சும்மா ஒரு விசிட் போய்வருவோமே' என்று நகரத்தின் துணை மேயர் கிளம்பி யிருக்கிறார். சிலையைப் பார்த்த அடுத்த நிமிஷமே திறப்பு விழாவை கேன்சல் செய்துவிட் டுத் தான் திரும்பி வந்தாராம். கார ணம், சிலையின் நிறம் அவருக்குப் பிடிக்கவில்லையாம்!

**இ**வர் கொடுத்த சங்கடம் ஒரு நகரத்தோடு முடிந்தது. தைவான்



## உலகே மாயம்

# இம்சை தலைவர்கள் 2008!

நாட்டு அமைச்சர் ஒருவர் கொடுத்த சங்கடத்தில் அந்த நாடே நெளிய ஆரம்பித்திருக்கிறது. அந்நாட்டின் கல்வி அமைச்சரான ட்டு-செங்-ஷெங் பாராளுமன்றத்தில் செய்யும் சேட்டைகளைச் சகிக்க முடியாமல் அவரைப் பதவியிலிருந்து விலக்குவதற்கு முடிவு செய்துவிட்டார்களாம்.

காபினட் அமைச்சர் என்றபோதிலும், பாராளுமன்றம் பக்கமாக எட்டிப்பார்ப்பதுகூட இல்லை. அப்படியே போனாலும் சுகமான

* ட்டு-செங்-ஷெங்



நித்திரையில் ஆழ்ந்துவிடுகிறார். எதிர்க்கட்சிகள் போடும் கூச்சலில் கண்விழித்துக்கொண்டாலும் மூக்குக்குள் கையைவிட்டு... ச்சீ என்ன இது? ஒரு பொறுப்பான பதவியில் இருப்பவர் பொது இடத்தில் இப்படியெல்லாமா நடந்துகொள்வது? சிலரால் நாட்டுக்கே அசிங்கம் என்று சகலரும் கொதித்துப்போயிருக்கிறார்கள்.

பார்லிமெண்ட்டுக்குக் கண்டிப்பாக வரவேண்டும், தூங்கக் கூடாது என்று இங்கேயும் சட்டம் போட்டால் எத்தனை பேர் மிஞ்சுவார்கள்?

மேலை கீழை நாடுகளில் அரசியல் தலைவர்கள் இப்படி விதம்விதமாய் கலக்கிக் கொண்டிருக்க இஸ்லாமிய நாடுகளின் தலைவர்கள் எப்போதும்போலவே தங்கள் 'அட்டென்ஷன்' பாலிசியைக் கஷ்டப்பட்டுக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

பஹ்ரைன் நாட்டு பாராளுமன்றம் அவசர அவசரமாய்க் கூடி ஒரு தடையுத்தரவு போட்டிருக்கிறது. ஷியா, ஸன்னி என்ற பகையை எல்லாம் மறந்துவிட்டு ஒருமித்த ஆதரவு வழங்கியிருக்கிறார்கள், அவையின் உறுப்பினர்கள். ஸ்ஷைஃபா வஹ்பே என்ற லெபனான் நாட்டு பாடகி கொஞ்சம் தாராளம்காட்டி நடத்தும் இசை நிகழ்ச்சியை எதிர்த்துதான் இவ்வளவு பரபரப்பும்.

'நல்லவிதமாய் நடந்துகொள்வார் என்று நிகழ்ச்சி அமைப்பாளர்கள் வாக்குறுதி கொடுப்பதை நம்பி அனுமதி கொடுக்கக்கூடாது. பஹ்ரைன் நாட்டின் பாரம்பர்யமான பெண்கள் உடையை அணிந்து பாடுவார் என்றால், யோசித்து முடிவு செய்யலாம்' என்று இறுதி முடிவு எட்டப்பட்டுள்ளது.

– ஸாந்த்





● டாக்டர் எஸ்.ஆர்.ரவி

# காதுக்குள் நீச்சல்!

**நீச்சல் அடிக்கும்போது காதுகளில் எதையோ பொருத்திக்கொண்டு நீச்சலடிப்பது நல்லது என்கிறார்களே. அதைப் பற்றி கொஞ்சம் விளக்க முடியுமா?**

**- சம்பத்குமார், சென்னை**

காது - மூக்கு - தொண்டை நிபுணர் டாக்டர் எஸ்.ஆர்.ரவி : இதன் பெயர் இயர் ப்ளக் (Ear plug). முக்கியமாக சென்னை போன்ற ஈரப்பதம் அதிகம் உள்ள இடங்களில், தண்ணீர் காதுக்குள் செல்லும்போது பாதிப்பு (ஃபங்கல் தொற்றுகள்) உண்டாக வாய்ப்பு அதிகம். எனவே, நீச்சல் குளத்தில் உள்ள நீரில் இருக்கக்கூடிய கிருமிகளால் காதுகள் பாதிப்படையாமல் இருக்க இயர் ப்ளக்குகளை அணிவது நல்லது. 'சிலிகான் கேப்' எனப்படும், காதுகளை மறைக்கும் தலைக்குல்லாவையும் சிலர் பயன்படுத்துவதுண்டு.

சாலைகளில் உண்டாகும் பலவித இரைச்சல்களிலிருந்தும் காதுகளைப் பாதுகாக்க சிலர் இயர் மஃப்களை (ear muff) அணிந்துகொள்கிறார்கள். ஆனால்,



இது அவசியம் என்று படவில்லை. நீங்கள் ஹெல்மெட் அணிந்துகெண்டு வண்டி ஓட்டுபவர் என்றால் அந்த ஹெல்மெட்டே காதுகளில் முக்கால்வாசி பகுதியை மறைத்துவிடுகிறது. இதுதவிர இயர் மஃப்பும் பொருத்திக்கொண்டால், தவிர்க்கக்கூடிய ஒலி மட்டுமல்ல கேட்கவேண்டிய ஒலிகள்கூட காதுகளை எட்டாமல் போய்விடும். பக்கத்தில் யாராவது ஹார்ன் அடித்தால்கூட எங்கோ தொலைதூரத்தில் அது கேட்பதுபோல உணர்வீர்கள். எனவே, வண்டியில் செல்லும்போது இயர் மஃப் அணிவதைத் தவிர்த்துவிடுங்கள். அதுதான் சாலைவிதிகளைக் கடைப்பிடிக்கவும், விபத்து நேரிடாமல் தடுக்கவும் உதவும். இல்லையேல் விளைவுகள் விபரீதம் ஆகும்.

**ஆணாக இருந்தும் எனக்கு மார்புப் பகுதிகள் பெண்ணுக்கு இருப்பதைப்போல் பெரிதாக காட்சி அளிக்கின்றன. இதைச் சரி செய்ய முடியுமா? அறுவை சிகிச்சை செய்துகொண்டால் ஹார்மோன்களில் மாறுதல் உண்டாகும் என்கிறார்களே?**

**- நரேந்திரன், திண்டிவனம்**




பிளாஸ்டிக் சர்ஜன் டாக்டர் டி.மதிவாணன் : இதை கைனகோமேஸியா என்போம். அறுவை சிகிச்சை மூலம் இதை நிச்சயம் உத்தரவாதமாக சரிசெய்ய முடியும். இரண்டு நாட்கள் மருத்துவமனையில் தங்க வேண்டியிருக்கும். அறுவை சிகிச்சைக்குப் பிறகு மூன்று வாரங்களுக்கு நாங்கள் கொடுக்கும் ஒரு பனியன் போன்ற ஜாக்கெட்டை அணிய வேண்டிவரும். அறுவை சிகிச்சைக்குப் பிறகு மீண்டும் அந்தப் பகுதி பருமனாவதில்லை.

அறுவை சிகிச்சையால் எந்த ஹார்மோன் மாறுதலும் ஏற்படுவதில்லை. ஆனால், ஏற்கெனவே ஹார்மோன்கள் ஒழுங்கில்லாமல் போனதால் இந்த நிலை ஏற்பட்டதா என்பதை ஆய்வு செய்த பிறகுதான் அறுவை சிகிச்சை செய்வோம்.

**- ஜி.எஸ்.எஸ்.**





**அ**ப்பாவுக்குக் கோபம் வந்து விட்டால், கைராட்டையில் நூல்நூற்க உட்கார்ந்து விடுவார்.

அவர் கோபத்தின் தன்மைக்கு ஏற்ப ராட்டையின் பெரிய தட்டும், சிறிய தட்டும் வேகமாகச் சுழலும்.

பஞ்சிலிருந்து விர்விர் ரென்று நூல் வெளிப்படும். பின் ஒரே பாய்ச்சலில் கீழிறங்கி தக்ளியில் சுற்றிக் கொண்டு பதுங்கிவிடும்.

தன்னுடைய கோபத்தை எல்லாம் அப்படியே சிட்டைகளாக்கி வைத்துவிடுவார்!

தெற்கு வீதியில் இருந்த காதி பவனில், அவற்றையெல்லாம் கொண்டு போய்க் கொடுத்து, கதர்ச் சட்டை வாங்கிப் போட்டுக் கொள்வார்.

ராட்டை சுற்றும்போது, அதிலிருந்து தேங்காய் எண்ணெயும் பஞ்சும் கலந்த ஒரு வாசனை வரும். மிகவும் சுத்தமாக நம்மை உணர வைக்கும் வாசனை.

காந்தி வாசனை.

எனக்கு ராட்டையில் நூல்நூற்க சொல்லிக் கொடுத்தார் அப்பா.

நூல் நூற்பது என்றால் அப்படியே உட்கார்ந்துவிடக்கூடாது.

முதலில் கைகால்களைச் சுத்தமாக அலம்பிக்கொண்டு வந்து உட்கார வேண்டும். அப்புறம் ராட்டையை அதற்காக உள்ள சிறுதுணியால் துடைக்க வேண்டும். ராட்டையின் சுழல்பகுதியில் இரண்டு சொட்டு தேங்காய் எண்ணெய் விடவேண்டும்.

பெட்டிபோன்ற பகுதியில் இருந்து விரல் மாதிரி இருக்கும் பஞ்சுத் துண்டை சுழலும் தக்ளியில் தொட்டால் நூல்வரும்.

அவசரமின்றி இழுத்துக் கையைப் பின் னோக்கிக்கொண்டு செல்ல வேண்டும். நூல் சீராக வந்து தக்ளியில் சுற்றும்.

அப்பா மாதிரி எனக்கு சீராக, மெல்லி சாக நூல்நூற்க வராது. திப்பித்திப்பியாக மொத்தமாக வரும்.

''பொறுமை வேணும்'' என்பார் அப்பா.

உப்புப் பெறாத விஷயத்துக்கெல்லாம் அம்மா அப்பாவிடம் சண்டை போடு வாள்.

கைராட்டை கோபமாகச் சுழலும்.

பஞ்சு சீற்றத்துடன் பாயும்.

''அவரோடு சேர்ந்து நீயும் ராட்டையும்




கையுமாய் உக்காந்துடாதே. வா கோயிலுக்குப் போகலாம்'' அம்மா கூப்பிடுவாள்.

வீடு திரும்பும்போது கைராட்டையின் கோபம் தணிந்து சக்கரங்கள் சாதுவாக இருக்கும்.

ஒருநாள்.

நானும் என் தங்கைகளும் அப்பா வைப் பார்த்து நடுங்கிப் போனோம்.

அப்பா கைராட்டையில் ஆவேசமாக நூல் நூற்றுக்கொண்டிருந்தார்.

புருவங்கள் நெறிகின்றன. பஞ்சுத் துகள்கள் பறக்கின்றன.

''சீனாக்காரன் சண்டைக்கு வந்தால் இவருக்கு என்ன வந்தது? காலையி லிருந்து சாப்பிடவில்லை; ஒரே கோபம்'' என்று கிராமசேவக்கிடம் அம்மா சொல்லிக்கொண்டிருந்தாள்.

எல்லோருமாகச் சேர்ந்துகொண்டு அப்பாவைச் சமாதானப்படுத்தினார்கள். அதற்குப் பிறகும் பலநாட்களுக்கு கைராட்டையின் கோபம் தணிய வில்லை.

ஒரு நாள் அப்பாவிடம் கேட்டே விட்டேன்.

''ஏன் கோபம் வந்தா நூல் நூற்க உட்கார்ந்துடறீங்க?''

அப்பா புன்னகை செய்தார்.

''நூல் நூற்றால் கோபம் போகும். மனசு ஒருமைப்படும். இதுதான் காந்தி சொன்ன கைராட்டை யின் தத்துவம்.''

உடனே நாங்கள் அவரைச் சுற்றி உட் கார்ந்து கொண்டு, ''அப்பா... அப்பா.. காந்தியைப் பாத்த கதை சொல்லுங்க'' என்போம்.

அவர் பலமுறை சொன்னதுதான். ஆனால், எத்தனை முறை கேட்டாலும் அலுக்காது.

''அப்போது நான் சிவகங்கைப் பூங்கா அருகிலிருந்த ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் படிச்சுக்கிட்டிருந்தேன். அப்ப தான் காந்திஜியைப் பார்த்தேன். ரயிலில் அவருக்காக ஒதுக்கிய பெட்டியிலிருந்து வெளியே வந்தார். கண்ணுக்கெட்டிய தூரம் மக்கள் கூட்டம் முண்டியடிக்கிறது.

அப்போது பலபலவென்று விடிந்து கொண்டிருந்தது.

அவர் ஏற்கெனவே நல்ல செப்பு நிறம். இப்போது காலைச் சூரியனின் கதிர்கள் பட்டு அவர் உடம்பே மின்னுகிறது தங்கம்போல! எல்லோரும் கதர்ச் சட்டை கொடுத்து அவரைக் கும்பிட்டார்கள். நானும் கதர்ச்சட்டை கொடுத்து வணங்கினேன்.

அவர் முகம்... அடடா... அப்படியே புத்தர் மாதிரி இருக்கு. கண்ணில் கருணை வழிகிறது.''

''உங்களோட பேசினாரா காந்திஜி?''

''அன்று அவர் மௌனவிரதம். பேசாதது ஒரு குறையாகவே தெரியவில்லை. எல்லோரையும் பார்த்துப் புன்னகை செய்தார் காந்திஜி. அந்தப் புன்னகை ஆயுசுக்கும் போதும். இந்தப் புன்னகையைப் பார்த்த பிறகும் அவரைக் கொல்ல கோட்சேக்கு எப்படித்தான் மனசு வந்ததோ?''

அப்பா, எங்களைத் தாண்டிக்கொண்டு எங்கோ பார்த்தார். பேசுவதை நிறுத்திவிட்டார்.

கைராட்டையின் சக்கரங்கள் சுழல ஆரம்பித்தன.

இந்த முறை ராட்டையில் இருந்து எழுந்த மெல்லிய ரீங்காரம் ராட்டையின் அழுகை போல இருந்தது.

**அ**ன்று இரவு என் கனவில் காந்தி வந்தார். எங்கள் வகுப்பிலிருந்த எல்லா மாணவர்களுக்கும் லட்டு கொடுத்தார். இதை என் பள்ளி நண்பர்களிடம் சொன்னேன்.

''நாங்க லட்டு சாப்பிடலையே!'' என்றார்கள் பரிதாபமாக.

சிலசமயம் அப்பாவிடம், ''அப்பா நீங்க சின்ன வயசுல ஏழையா இருந்த கதையச் சொல்லுங்கப்பா'' என்போம்.

''அதுவா, சொல்றேன். நாங்க பரம ஏழை. கூரை வீடு. தரைபூரா வெள்ளிக் காசா கொட்டிக் கிடக்கும்!''

''ஏதுப்பா வெள்ளிக்காசு? நீங்கதான் ஏழையாச்சே?''

அப்பா சிரிப்பார்.

''கூரையில் நிறைய ஓட்டைகள் இருக்கும். சூரியவெளிச்சம் அதன் வழியே வந்து தரையில் வட்டவட்டமாக விழும். பார்க்க வெள்ளிக் காசுகளா தெரியும்!''

''ம், அப்புறம்?''

''எங்க வீட்ல ஒரு பெரிய வெங்கலத் தட்டு இருந்தது. அதுல அம்மா சாதத்தைப் பிசைஞ்சு உருண்டைகளா உருட்டி வைப்பாங்க. நாலஞ்சு உருண்டைகள்தான். ஆனாலும் வயிறு ரொம்பிடும். அம்மா கையால சாப்பிட்டா அப்படித்தான்.''

அப்பா கதை உருக்கமாகப் போகும்.

''அப்பளம் போட்டு வித்துதான் ஜீவனம் பண்ணினோம். அப்பா சின்ன வயசில் செத்துப் போய்விட்டார். அம்மா போட்டுத் தர்ற அப்பளத்தை நான் கடையில் கொண்டுபோய்க் கொடுத்து வருவேன். அம்மாவின் அப்பளப்பூ ரொம்ப ருசியாக இருக்கும். தேடி வந்து

## மனசில் பாபா!

''**எ**ந்தப் பத்திரிகையைப் புரட்டினாலும் பாலியல் கொடுமைதான் பிரதான இடத்தைப் பிடித்துவிடுகிறது. சமூகத்தை அச்சுறுத்தும் இந்தப் பிரச்னையைக் களமாகக் கொண்டுதான் 'அலிபாபா' படத்தைக் கவனமாகச் செதுக்கிருகிறோம்'' என்கிறார் இயக்குநர் நீலம் கே.சேகர். யார் இவர்? 'பில்லா' விஷ்ணுவர்தனின் கோ-டைரக்டர். ''அலிபாபா என்பது ஃபேன்டஸி டைட்டில் மாதிரி இருக்கும். ஆனால், அதற்குள் ஒளிந்திருக்கும் விஷயம் அலாதியானது. பிரகாஷ்ராஜ் பின்னியெடுத்திருக்கிறார். சமீபத்தில் உரத் தொழிற்சாலை ஒன்றில் சில காட்சிகளை படமாக்கினோம். அனைவருக்குமே உடல்நலம் முடியாமல் போய் விட்டது. ஆனால், அதையும் பொருட்படுத்தாமல் சிறப்பாக நடித்திருக்கின்றனர். மிக விரைவில் திரைக்கு வருகிறான் அலிபாபா''என்கிறார் நீலம். கே.சேகர். – **லாவண்யா**

வாங்கிட்டுப் போவாங்க. ஆனால், எனக்கு மட்டும் சாதத்துக்குத் தொட்டுக் கொள்ள ஒரே ஒரு அப்பளப்பூதான்!''

''அது எப்படிப் போதும்?''

''பாதிச் சாப்பாட்டை அப்பளப் பூவைப் பாத்துக்கிட்டே சாப்பிடு வேன். மீதிச் சாப்பாட்டை அதைத் தொட்டுக்கிட்டுச் சாப் பிடுவேன்.''

''பாவம்ப்பா நீங்க!''



அம்மா குறுக்கே புகுந்து ''பாவமெல்லாம் இருக் கட்டும். உங்க அப்பா கிட்டே அந்த வெண்கலத் தட்டு எங்கேன்னு கேட்டீங் களா?'' என்பாள்.

''வெண்கலத்தட்டு: வெண்கலத் தட்டு. இதை விடவே மாட்டியா?'' என்பார் அப்பா கோபத்துடன்.

''அப்பா சண்டை வேண்டாம்ப்பா. சண்டை வேண்டாம்ப்பா'' என்று சொல்லி, கைராட்டையை அவருக்கு முன்னால் நாங்களே கொண்டுவந்து வைப்போம்.

அப்பா சிரித்துவிடுவார்.

பிறகு அவராகவே ''உங்கள்ட்ட சொல் றதுக்கு என்ன? ஒரு நாள் என்னோட அண்ணா மன்னியோட வந்து, வீட்ல இருந்த பித்தளைப் பாத்திரங்களை எல்லாம், வண்டியில் அள்ளிப் போட்டுக் கொண்டு போயிட்டார். அதோட வெண் கலத் தட்டும் போயிட்டுது.''

''உங்க அப்பா மாதிரி ஏமாளியா இருக் காதீங்க'' என்பாள் அம்மா.

அம்மா, தன் பங்குக்கு ஒரு அப்பா கதை சொல்லுவார். அவள் மாமியார் சொன்ன கதையாம்.

**வி**நாயகசதுர்த்தி அன்று ஒரு பெரிய தூக்குப் பாத்திரம் நிறைய கொழுக்கட்டைகள் செய்து, 'கோயிலுக்குப் போய் நைவேத்தி யம் பண்ணிட்டு வா' என்று அம்மா கொடுத்திருக்கிறார்.

நைவேத்தியம் முடிந்ததும் கோயிலுக்கு வெளியே பசிக் கிறது என்று சொன்ன பிச்சைக் காரனிடம் ஒரு கொழுக்கட்டை கொடுத்திருக்கிறார்.

அதைப் பார்த்துவிட்டு அங்கி ருந்த குழந்தைகள் எல்லாம் 'அண்ணா, எனக்கு ஒண்ணு எனக்கு ஒண்ணு...' என்று சூழ்ந்து கொண்டுவிட்டனவாம்.

எல்லா குழந்தைகளுக்கும் கொடுத்துவிட்டு காலிப் பாத்திரத்துடன் வீடு திரும்பி னாராம் அப்பா.

கடைசிவரை அப்படியேதான் இருந் தார். பிழைக்கத் தெரியாதவராக, காசு பண்ணத் தெரியாதவராக, கபடம் இல் லாதவராக...

''அப்பா மாதிரி இருக்காதீங்க. சமத்தா இருங்க...'' என்றாள் அம்மா.

''குழந்தைகளுக்கு நல்லதைச் சொல்லிக்கொடு'' என்று சொல்லிவிட்டு அப்பா கோபத்துடன் எழுந்தார்.

கைராட்டை சுழல ஆரம்பித்தது.

அப்பாவைப் போலவே மெல்லிய ஆனால் மிகச் சீரான, உறுதியான நூல், அவர் விரல்களுக்கு இடையே பிடித்தி ருந்த பஞ்சிலிருந்து வெளிப்பட்டது. ●

# 'சை!'னஸ்

"நகரத்தின் பிஸியான தெரு ஒன்றில், ஓரமாக ஒரு காரை நிறுத்துங்கள். மாலையில் வந்து பார்த்தால், அந்த காரின் மீது மிக அழுத்தமாக ஒரு கறுப்புப் படலம் இருக்கும்.

நம் நுரையீரல்களிலும் இதே போன்ற ஒரு படலம் உருவாகியிருக்க வாய்ப்பு உண்டு. காற்றில் பரவியுள்ள, இதே நச்சுப் பொருட்கள் நாம் சுவாசிக்கும்போதும் உள்ளே நுழையும்தானே!" என்று கவலையுடன் குறிப்பிடுகிறார் காது - மூக்கு - தொண்டை நிபுணர் டாக்டர் துளசிதாஸ்.

இப்போது மிகப் பரவலாகக் காணப்படும் சைனஸ் பாதிப்பின் அடிப்படைகள் குறித்தும், இது தொடர்பான சிகிச்சையில் ஏதாவது புதிய முன்னேற்றங்கள் உண்டா என்றும் நாம் அவரிடம் கேட்டபோதுதான் இப்படி ஒரு திகிலான விளக்கம் கிடைத்தது.

"மூக்கு மிகவும் நுட்பமானது. தூசு போன்றவை உள்ளே செல்லும்போது நம் உடல் அதற்கேற்ப மாறுகிறது. சளி, மூக்கடைப்பு, தும்மல் இவையெல்லாமே இப்படித்தான் தோன்றுகின்றன.

சைனஸ் என்பது மேல் மண்டைப் பகுதியில் உள்ள வெறும் வெற்றிடங்கள். காற்றுப் பைகள் என்றும் கூறலாம். நம் மூக்கைச் சுற்றி அமைந்தவை. ஒரு பக்கத்துக்கு நான்கு என்று மொத்தம் எட்டு சைனஸ்கள் உள்ளன.

இவற்றால் மூன்றுவித பலன்கள் உண்டு. அவற்றில் ஏதும் இல்லை என்பதால், மண்டை ஓடு ஓரளவு லேசாக இருக்கிறது. பெண்களின் முகத்தில் சைனஸைச் சுற்றியுள்ள எலும்பு எடுப்பாக இருந்தால், அவர்களின் முகம் தனி வசீகரத்துடன் மிளிரும்.

இந்த சைனஸ் பைகளில் சுரப்பிகள் உண்டு. இவற்றிலிருந்து சுரப்பதுதான் சளி. சளி வெளியேறுவதற்கான துவாரங்கள் அடைக்கப்பட்டிருந்தால், சைனஸ் தொந்தரவு தொடங்கிவிடும். வைரஸ்களினால் ஏற்படும் பாதிப்பு இது.

சளி வெளிவராத நிலையில், அங்கு பாக்டீரியா கிருமிகள் செயல்படும்போது, அந்தச் சளி சீழாக மாறும். காதையும் மூக்கையும் இணைக்கும் குழாயிலும் இந்தப் பாதிப்பு பரவி, அது தனது செயல்பாட்டையும் குறைத்துக் கொள்வ



தால், காதுவலியும் காது அடைப்பும் உண்டாகும்.

சைனசிடிஸின் முதல் கட்டத்தில் இரவில் தூக்கம் கலைந்தில் வராது. மாறாக, பகலில் தூக்கம் வரும். இதுபோன்ற நிலையில் நூறில் எழுபத்தைந்து பேருக்கு, உடல் தானாகவே போராடி, இந்தச் சிக்கலிலிருந்து தன்னை மீட்டுக்கொள் கிறது.

அந்த மீதி 25 பேர் பெரும்பாலும் யாராக இருப்பார்கள் தெரியுமா? ஒவ்வாமை இருந்து, அதை நீக்கும் நடவடிக்கையில் ஈடுபடாதவர்கள். அல்லது மூக்கு அடை-



பட்ட நிலையிலும் தொடர்ந்து ஐஸ் வாட்டர் குடிப்பது, ஏ.சி. காற்றுக்கு எதிரே முகம் இருக்குமாறு அமர்வது... போன்ற தவறான செயல்களில் ஈடுபடுபவர்கள்.

இந்த முதல் இரண்டு கட்டங்களிலும், உரிய மருந்து மாத்திரைகள் மூலம் சைனஸைக் கட்டுப்படுத்திவிட முடியும். ஆனால், மூன்றாவது கட்டத்தில் சைனஸ் பாதிப்புப் பிற பகுதிகளுக்கும் பரவுகிறது. கண்கள், மூளை போன்ற பகுதிகளுக்குக் கூட இது பரவக்கூடும். பொதுவாக தொடர்ந்து மூன்று மாதங்களுக்குச் சிகிச்சை எடுத்துக் கொள்ளாத நிலையில், இந்தக் கட்டம் தோன்றுகிறது. அப்போதுதான் அறுவை சிகிச்சை அவசியமாகிவிடு கிறது.''



● டாக்டர் துளசிதாஸ்

சைனஸ்''க்கான அறுவை சிகிச்சையில் அவ்வளவாகப் பலன் இருக்கிறதா என்றால், ''சமீப காலம் வரை பலன் இருக்கவில்லை. ஆனால், 'எண்டோஸ்கோபிக் முறை' அறுவை சிகிச்சை அறிமுகமான பிறகு, பெரும் முன்னேற்றம். சைனஸின் உள்ளே இருக்கும் பாதிப்புகளை வெளியேற்றுவதுடன், அங்குள்ள துவாரங்களையும் சற்றுப் பெரி தாக்கிவிடுவதால், வருங்காலத்திலும் சைனஸ் பாதிப்பைப் பெருமளவில் தவிர்த்துவிட முடிகிறது. முன்பு முகத்தின் சில பகுதிகளைத் திறந்து அறுவை சிகிச்சை நடத்த வேண்டியிருந்தது. இதனால் சில சமயம் தழும்பு ஏற்பட்டு வந்தது. இப்போ தைய முறையில் மூக்கின் துவாரத்தின் உட்புற வழியாகவே அறுவை சிகிச்சை நடத்துவதால் தழும்பு ஏற்பட வாய்ப்பில்லை. அறுவை சிகிச்சை முடிந்த ஒரே நாளில் வீட்டுக்குத் திரும்பிவிடலாம்'' என்றார்

**சை**னஸ் பாதிப்பு உண்டாகாமலோ, அதிகமாகாமலோ இருக்க நாம் செய்யக் கூடியவை என்ன?

''சுவாசத்துக்குக் கேடு விளைவிக் கக் கூடிய சூழலில் வேலை செய்ய நேர்ந்தால் இதற்கான முகமூடியை (சர்ஜிகல் மாஸ்க்) அணியலாம். இவை எல்லாவற்றையும்விட முக்கியமானது, நம்மைச் சுற்றி யுள்ள காற்று மண்டலம் அசுத்த மில்லாமல் இருக்க அனைவரும் ஒத்துழைப்பதுதான்'' என்கிறார் டாக்டர் துளசிதாஸ்.

– ஜி.எஸ்.எஸ்.




தெலுங்கு, தமிழ், இந்தி என்று பல மொழிகளிலும் படங்கள் தயாரித்த பெரிய தயாரிப்பாளர் பூர்ண சந்திர ராவ். அவர், தெலுங்கில் தாம் தயாரித்து வெள்ளி விழா கொண்டாடிய படம் ஒன்றைத் தமிழில் ரஜினியை வைத்து எடுக்கவேண்டும் என்றும், நான் அந்தப் படத்தை இயக்க வேண்டும் என்றும் விரும்பினார். எனக்குப் படத்தைப் போட்டுக் காட்டினார். ஒரு மனிதன் இறந்து போவான். அவனது உடம்பில் இன்னொரு ஆவி புகுந்து கொள்ளும். அதனால் ஏற்படும் குழப்பங்கள், சுவாரசியங்கள் என்று கதை நகரும்.

# கிராஃபிக்ஸில்

அந்தப் படம்தான் 'அதிசயப் பிறவி'.

வினுசக்ரவர்த்தி எமனாகவும், சோ சார் சித்திரகுப்தனாகவும் நடித்தார்கள். அந்தப் படத்தில் நகைச்சுவை பிரமாதமாக அமைந்தது. ரஜினி நடித்த இரண்டு கதாபாத்திரங்களில், ஒன்றுக்கு ஜோடி கனகா. இன்னொன்றுக்கு இந்தியிலிருந்து அழைத்து வரப்பட்ட ஷீபா. ஏராளமான பொருட்செலவில் எமலோக செட்களைப் பிரம்மாண்டமான முறையில் உருவாக்கினார், பல மொழிப் படங்களுக்கும் செட் அமைப்பதில் சாதனை படைத்த ஆர்ட் டைரக்டர் சலம். இப்படித் தனித்தனியாக ஒரு படத்தின் அம்சங்கள் எல்லாமே நன்றாக அமைந்தாலும்கூட, அடிப்படையில் இறந்துபோன ஒருவர் எமலோகத்திலிருந்து திரும்பி வரும் லாஜிக்கை ரசிகர்கள் ஏற்றுக் கொள்வார்களா என்பதுதான் கேள்விக்குறியாக இருந்தது. படம் வெளியானபோது, தெலுங்கைப் போல, வெற்றி பெறவில்லை. இதன்மூலமாக, 'ஒரு மொழியில் பெரும் வெற்றி பெற்ற படம், இன்னொரு மொழியில் வெற்றி பெறும் என்பதற்கு உத்தரவாதமில்லை' என்ற பாடத்தைக் கற்றுக்கொண்டோம்.

குழந்தைகளுக்கு, ரஜினி மேல் இருக்கும் அளவற்ற பாசத்தைப் பல சமயங்களில் பார்த்த சரவணன் சார், ''ரஜினியையும், குழந்தைகளையும் வைத்து ஒரு படம் எடுத்தால், குழந்தைகளுக்கெல்லாம் மிகவும் சந்தோஷமாக இருக்குமில்லையா?'' என்று கேட்டார். அதன்படி பல்வேறு வயதில் ஐந்து குழந்தைகளை வைத்து உருவாக்கப்பட்ட கதைதான் 'ராஜா சின்ன ரோஜா'. தாயில்லாத ஐந்து குழந்தைகள். அவர்களின் அப்பா ரவிச்சந்திரன், குழந்தைகளைக் கவனிக்க நேரமில்லாத பிஸியான பிசினஸ்மேன். பிசினஸ் விஷயமாக எல்லா நாடுகளிலேயும் இருப்பார். ஆனால், குழந்தைகளுடன் வீட்டில் மட்டும் இருக்கமாட்டார். ரவிச்சந்திரனைப்



பார்க்க கிராமத்திலிருந்து வருகிற அவரது சித்தப்பா, அந்த வீட்டில் நடக்கும் திருட்டைப் பார்த்து அதிர்ச்சி அடைகிறார். குழந்தைகளையும் வீட்டையும் பொறுப்புடன் கவனித்துக்கொள்ள ஒருவரை வைத்துக்கொள்ளுமாறு கூறுகிறார்.

கிராமத்தில் தெருக்கூத்தில் ரஜினியின் ரசிக்கத்தக்க நடிப்பைப் பார்த்து, 'மெட்ராஸு'க்குப் போனால் உனக்கு சினிமா சான்ஸ் கிடைக்கும்; நீ பெரிய நடிகனா வரலாம்' என்று அவருக்கு ஊர்க்காரர்கள் ஆசை ஊட்ட, அதில் மயங்கி சென்னைக்கு வரும் ரஜினி, சினிமா வாய்ப்புத் தேடி வருகிறவர்கள், முதலில் தங்கும் வீடு ஒன்றில் தங்கி, சினிமா வாய்ப்புக்கு முயற்சி செய்வார். அந்தச் சமயத்தில்தான் ரஜினிக்கு பணக்காரர் ரவிச்சந்திரனின் குழந்தைகளை

# ரஜினி!



வீட்டோடு இருந்து கவனித்துக்கொள்ளும் வேலை கிடைக்கும். அந்த வீட்டில் இருந்துகொண்டு, குழந்தைகளை அன்போடும் அக்கறையோடும் கவனித்துக்கொண்டே, அங்கே நடக்கும் தவறுகளை எப்படிக் கண்டுபிடிக்கிறார், அதில் அவர் சந்திக்கும் சவால்கள் என்னென்ன? இறுதியில் எப்படி வெற்றிகரமாக முடிக்கிறார் என்பதுதான் கதை.

அந்தப் படத்தில் 'சூப்பர் ஸ்டாரு யாருன்னு கேட்டா, சின்னக் குழந்தையும் சொல்லும்' என்று ஒரு பாட்டு வரும். ரஜினி - கௌதமி நடித்த அந்தப் பாடலின்போது, பின்னணியில் வரிக்கு வரி தரையிலிருந்து ஒவ்வொரு வண்ணத்தில் புகை எழும்பும். அது மிகவும் புதுமையாக அமைந்ததால், பாடல் வரிகள் மட்டுமின்றி, ஏக்நாத் என்ற ஸ்பெஷல் எஃபெக்ட் கலைஞரின் திறமையில் உருவான பாடல் காட்சியும் மிகுந்த வரவேற்பைப் பெற்றது. அந்த வீட்டின் குழந்தைகளுள் வளர்ந்த பெண், போதை மருந்துப் பழக்கத்துக்கு அடிமையாகி இருப்பார். அவரை ஒரு பாடல் பாடி, திருத்துவார் ரஜினி.

குழந்தைகளை மையமாகக் கொண்ட படம் என்பதால், அனிமேஷன் தொழில்நுட்பத்தைக்கொண்டு ஒரு பாடலை உருவாக்கினால், குழந்தைகள் மத்தியில் அமோகமான வரவேற்பைப் பெறும் என்று ஐடியா கொடுத்தார் சரவணன் சார். இன்றைக்கு உள்ளது போல அப்போது கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் தொழில் நுட்பம் கிடையாது! எனவே, ரஜினி குழந்தைகளுடன் ஒரு காட்டுக்குள்ளே போய், பல மிருகங்களுடன் கலந்து பாடுவதுபோல அந்தப் பாடலை எடுக்கத் திட்டமிட்டோம். அது எங்களுக்குப் பெரும் சவாலாக இருந்தது. பாடலைப் படம் பிடிக்கிற சமயத்தில் அனிமேஷன் கேரக்டர்கள் எதுவும் இருக்காது. ஆனால், அவை இருப்பதுபோல கற்பனை செய்துகொண்டு அதற்கேற்ப ரஜினியையும், குழந்தைகளையும் நடிக்கச் செய்து படம் பிடித்தோம்.



பாடலுக்குரிய அனிமேஷன் காட்சிகளை யாரை வைத்து எடுப்பது என்று யோசித்தபோது, மும்பையில் ராம்மோகன் என்பவர் ஒரு அனிமேஷன் எக்ஸ்பர்ட் என்றும் அவர்தான் இதற்குப் பொருத்தமான மனிதர் என்றும் கூறினார்கள்.

விசாரித்தபோது, ராம்மோகன் மிகவும் பிஸியான மனிதர் என்று தெரிய வந்தது. சென்னையில் படத்துக்குப் பூஜை போட்ட அன்று மதியமே, மும்பைக்குப் புறப்பட்டுச் சென்று ராம்மோகனைச் சந்தித்தேன். ''ஒரு முழு பாடலுக்கும் அனிமேஷன் செய்ய வேண்டும் என்றால் குறைந்தது நாலு முதல் ஆறு மாதங்கள் ஆகும்'' என்றார். உடனே, நான், ''பரவாயில்லை; இன்றைக்குத்தான் நான் படத்துக்கு பூஜை போட்டிருக்கிறேன்; முதல் ஷெட்யூலிலேயே இந்தப் பாடலை நான் படம் பிடித்து உங்களிடம் கொடுத்துவிடுகிறேன்; நீங்கள் நிதானமாக எனக்கு அனிமேஷன் பணியை முடித்துக் கொடுங்கள்''

● 'அதிசயப் பிறவி' - ரஜினி-கனகா



என்றேன். இதைக் கேட்ட ராம்மோகனுக்கு ஒரே ஆச்சரியம். ''வழக்கமாக, 'படம் அடுத்த மாதம் ரிலீஸ். எப்படியாவது ஒரே வாரத்தில் அனிமேஷன் பண்ணிக் கொடுங்கள்' என்றுதான் பலரும் எனக்கு பிரஷர் கொடுப்பார்கள்; ஆனால், நீங்கள் படத்துக்குப் பூஜை போட்ட அதேநாளில் என்னை வந்து சந்தித்திருக்கிறீர்கள். அதுவும் இது பாரம்பரியம் மிக்க ஏவி.எம். படம். கவலைப்பட வேண்டாம்; நீங்கள் பாடலைக் கொடுத்த நான்கு மாதங்களில் நான் அனிமேஷனை முடித்துக் கொடுத்து விடுகிறேன்; உங்களது திட்டமிடுதலைப் பாராட்டுகிறேன்'' என்று மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார்.



சொன்னபடியே குறித்த நேரத்தில் கிட்டத்தட்ட 40 ஆயிரம் படங்களைக் கையாலேயே வரைந்து, அந்தப் பாடலுக்குரிய அனிமேஷன் பணியைச் சிறப்பாகச் செய்து முடித்தார் அனிமேஷன் நிபுணர் ராம்மோகன். இந்திய திரைப்பட வரலாற்றிலேயே, நடிகர்களும் அனிமேஷன் கேரக்டர்களும் ஒன்றிணைந்து இடம் பெற்ற முதல் பாடல் காட்சி அதுதான். அந்தப் பாடல், அந்தப் படத்தின் ஹைலைட்டாக அமைந்தது.

அந்தப் பாடலைப் படம் பிடித்தபோது, ரஜினியும் கௌதமியும் பொறுமையாக குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்து, எங்களுடைய புதிய முயற்சிக்கு அளித்த ஒத்துழைப்பு மறக்க முடியாதது. ஆனால், ஊட்டியில் படப்பிடிப்பின்போது எங்களுடன் ஒத்துழைக்காமல் ஒருவர் முரண்டு பிடித்தார்?

(அடுத்த இதழில் முடியும்)

எழுத்து வடிவம் :
எஸ்.சந்திரமௌலி

# தடுமாறும் தாய்மார்கள்

"தடுப்பூசி போட்டு, திருவள்ளூர் மாவட்டத்தில் குழந்தைகள் இறந்த விவகாரத்தில் எந்தவிதமான அரசியலுக்கும் இடம் கொடுக்காமல் திட்டத்தை அமல்படுத்த வேண்டும். இல்லையேல், அறுபது வருட காலம் தடுப்பூசிகளின் அவசியத்தைக் குறித்துச் செய்த பிரசாரம் பயனற்றுப் போய்விடும்'' என்கிறார் மகப்பேறு மற்றும் குழந்தைகள் சிறப்பு சிகிச்சை நிபுணர் டாக்டர் தமிழிசை சௌந்தர்ராஜன்.



'நோய் வந்தால்தானே ஊசி போட வேண்டும். அதற்கு முன்பு அதைத் தடுப்பதற்கு ஊசியெல்லாம் போடக் கூடாது' என்று அறியாமையில் இருந்து வந்த நமது கிராமப்புற மக்கள், இப்போதுதான் விழிப்புணர்வு பெற்றிருக்கிறார்கள். திருவள்ளூரில் நடந்தது போன்ற மரணங்கள் நிகழ்ந்தால், நமது மக்களிடம் பயம் ஏற்பட்டு தடுப்பூசிகளின் மீதான நம்பிக்கையை இழந்து விடுவார்கள். எதிர்கால தலைமுறையும் நோயாளியாக மாறி விடும் அபாயம் இருக்கிறது. பல முன்னேறிய நாடுகளில் தடுப்பூசிகள் போடுவது நூறு சதவிகிதம் நடைமுறையில் உள்ளது.

திருவள்ளூர் விவகாரத்துக்குக் காரணம் தரமற்ற மருந்தா, அல்லது ஊசி போட்டவரின் அஜாக்கிரதையா, அல்லது அந்தக் குழந்தைகள் ஏற்கெனவே ஏதாவது பாதிப்பில் இருந்ததா என்பதையெல்லாம் குறித்து தீவிர விசாரணை தேவை. சம்பவம் நடந்த அன்று திருவள்ளூர் மாவட்டம் தவிர வேறு பல மாவட்டங்களிலும், அதே பாட்சில் (Batch) உற்பத்தி செய்த தடுப்பூசி மருந்து ஆயிரக்கணக்கான குழந்தைகளுக்குப் போடப்பட்டிருக்கிறது. அங்கெல்லாம் எவ்வித பாதிப்பும் இல்லை. ஹைதராபாத்தைச் சேர்ந்த தடுப்பூசி மருந்தை உற்பத்தி செய்த தனியார் துறை நிறுவனம், தடுப்பூசி மருந்து ஒப்பந்தத்தைப் பெற டெண்டரில் மிகக் குறைவான ரேட் குறிப்பிட்டிருந்ததாம். அதனால்தான் அதற்கு ஒப்பந்தம் வழங்கப்பட்டதாம். இது சரியான கேலிக்கூத்து. காரணம், குழந்தைகளின் உயிரோடு விளையாடும் இதுபோன்ற விவகாரங்களில் 'குறைந்த ரேட் டெண்டர்' என்று பார்க்காமல், 'ரேட்' கொஞ்சம் அதிகமாக இருந்தாலும் தரத்தை மையப்படுத்தியல்லவா ஒப்பந்தம் கொடுக்க வேண்டும்?

தடுப்பூசி மருந்துகள் cold chain





● தமிழிசை சௌந்தர்ராஜன்.

# தடுப்பூசிக்குத் தடா?

என்ற முறையில் குறிப்பிட்ட வெப்பநிலையில் பாதுகாக்கப் பட வேண்டும். மின் சப்ளை போனால், மருந்தை தெர் மோகூல் பெட்டியில் எடுத்து வைக்க வேண்டும் என்று மருத்துவப் பணியாளர்களுக்கு அறிவுறுத்தப்பட்டி ருந்தாலும், கடைப்பிடிக்கப்படுவதில்லை. இதன் காரணமாக தடுப்பூசி மருந்தில் பாக்டீரியாக்கள் உண்டாகி, அது குழந் தையின் உடலில் கலக்கிறபோது ஒவ் வாமை ஏற்படுகிறது.

தடுப்பூசி மருந்துப் பவுடரை, உரிய திரவத்துடன் கலந்து உபயோகிக்க வேண்டும். அந்தக் கரைசலை குறிப்பிட்ட நேரத்துக்குள், பயன்படுத்திவிட வேண் டும்.

நமது நாட்டில் ஐம்பது சதவிகித குழந் தைகள் ஊட்டச் சத்துக் குறைவால் அவதிப்படுகிறார்கள். தடுப்பூசி மருந்தும் 'பதப்படுத்தப்பட்ட வைரஸ்'தானே. **ஊட் டச் சத்து குறைவாக உள்ள குழந்தைகள் அந்த மருந்தின் வீச்சைத் தாங்கிக்கொள்ள முடியாத நிலையிலும் ஒவ் வாமை ஏற்படலாம்.** இறந்த நான்கு குழந்தைகளுக்கும் தடுப்பூசி போடப்பட்டவுடன் மூளை பாதிக்கப்பட்டு, அதன் மூலம் (Anaphylactic) மரணம் ஏற்பட்டதாக இப்போது கண்டறியப்பட்டிருக்கிறது. இது உச்சகட்ட அபாயகரமான ஒவ்வாமை.

நமது நாட்டில் பல்லாண்டுகளாக தடுப்பூசி மருந்துகளைத் தயார் செய்து வந்த மூன்று மத்திய அரசு நிறுவனங்களை மூட அரசு முடிவு செய்திருக்கிறது. காரணம், உலக சுகாதார நிறுவனம், அந்த நிறுவனங் கள் தரக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்க வில்லை என்று சொல்லிவிட்டதாம். இவற்றை மூடிவிட்டு தமிழகத்தில் 150 கோடி ரூபாய் செலவில் தடுப்பூசி மருந்து தயாரிப்பு பூங்கா அமைக்கப் போகிறார் களாம். மூடப்படவுள்ள நிறுவனங்கள் தயாரித்த தடுப்பூசிகளைத்தான் நாம் பல்லாண்டுகளாக பயன்படுத்தி வந்திருக் கிறோம். இது தவிர, இந்த நிறுவனங்கள் தயாரித்த மருந்துகள் இன்னமும் பயன் பாட்டுக்காக நாடு முழுவதும் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன!

- ப்ரியன்

'அறை எண் 305ல் கடவுள்', கஞ்சா கருப்புக்கு புதிய கதவுகளைத் திறந்து வைத்துள்ளது. ஹீரோ அவதாரம் அடுத்த கட்டத்துக்குக் கைப்பிடித்து அழைத்துச் செல்ல, 'அழகர் மலை' ஷூட்டிங்கில் பின்னிப் பெடலெடுத்துக்கொண்டிருந்தவரிடம் பேசினோம்...

# கஞ்சா கருப்புவின்



**சின்னச் சின்ன ரோல்ல நடிச்சிட்டிருந்தப்ப இப்படி ஒரு கதாநாயக வாய்ப்புக் கிடைக்கும்னு நினைச்சீங்களா?**

''சத்தியமா இல்லண்ணே. சிம்புதேவன் அண்ணன் சொன்னதும் ஒரு நிமிஷம் ஆடிப் போயிட்டேன். நமக்கு இது சரியா வருமான்னு ரொம்ப யோசிச்சேன். எல்லாம் நல்லதுக்குத்தான்னு கடவுள் மேல பாரத்தைப் போட்டுட்டு நடிச்சேன். இதோ இப்ப 'கடவுள்' என்னைக் கரை சேத்துட்டாரு.''

**சிம்புதேவன் எப்படி?**

''தங்கம்ணே அவரு. என்கிட்ட ஒவ்வொரு சீனையும் தத்ரூபமா விளக்கி தனக்குத் தேவையானதை வாங்கிப்பாரு. நிறைய சுதந்திரம் தருவாரு. சினிமா ஷூட்டிங் மாதிரியே இருக்காது. ஏதோ ஃப்ரெண்ட்ஸ் எல்லாரும் சேர்ந்து குரூப் டிஸ்கஷன் நடத்தறா மாதிரி இருக்கும். இவரு மாதிரியேதான் ஒளிப்பதிவு பண்ணின சௌந்தரராசன் அண்ணனும். 'கருப்பு, மூஞ்சி மட்டும்தான் தெரியும். அந்தளவு நடிச்சா போதும்'னு ரொம்ப நுணுக்கமா சொல்லிக் கொடுப்பாரு.''



**கடவுள் உங்க முன்னாடி நிஜமாவே வந்தா என்ன கேப்பீங்க?**

''எங்க ஊரு மக்கள சென்னையில வாழ வைக்க வழி கேப்பேன். நம்ம ஊர்ல முனியாண்டி, கடலமாடன், அய்யனாருன்னு சாமிங்க சாஸ்தி. அவிங்க கோயில்ல எல்லாம் அன்னதான திட்டம் இல்லண்ணே. ஆனா, சென்னைல எல்லா கோயில்லயும் சோறு போடறாங்க. ஊர்ல கஷ்டப்படற மக்கள சென்னைக்கு வரவழைச்சு, வயிறார ஒரு வேளையாவது சாப்பிட வைக்கணும்னு எனக்கு ஆசைண்ணே.''

**ஷங்கர் என்ன சொன்னார் படம் பாத்துட்டு?**

''ரொம்பப் பாராட்டுனாருண்ணே. தியேட்டர்ல படம் பார்த்துட்டு வரும்போது அவரு கால்ல விழுந்துட்டேன். 'சிம்பு கால்ல உழு.

அவர்தான் நீ வேணும்னு விடாப்பிடியா இருந்தாரு'ன்னாரு. இந்த ரெண்டு பேருக்கும் என் ஆயுசு உள்ள வரைக்கும் நன்றி சொன்னாக்கூட போதாதுண்ணே.''

வாப் போச்சுண்ணே. கிளி மாதிரி அழகும் புறா மாதிரி மென்மையான மனசும் இருந்த ஒரு பயபுள்ளயக் காதலிச் சேன்ணே. வீட்டுக்குத்



# ப்ளஸ் பாய்ண்ட்!



தெரிஞ்சு பிரிச்சு மேய்ஞ்சுட்டாங்கண்ணே. நம்மளுக்கும் ஒரு டாக்டர் பொண்ணு கிடைச்சா தேவலையா இருக்கும்ணே. நான் ஒரு பக்கம் ஜனங்கள சிரிக்க வச்சா, அவ ஒரு பக்கம் ஊசி கிசி போட்டு நோய்ல கஷ்டப்படறவங்களக் காப்பாத்தி அழ வைக்காம இருப்பா.''

**மண் மணம் கமழ பேச ரொம்ப ட்ரெய்னிங் எடுப்பீங்களோ?**

''அது நம்ம ப்ளட்லயே இருக்கறதுண்ணே. ஆனா, அது எனக்கு மொதல்ல தெரியல. அப்புறம் நம்ம பாரதிராசா அண்ணே, அமீர் அண்ணே, பாலா அண்ணே எல்லாம், 'டேய் கருப்பு, இதுதான் உன் ப்ளஸ் பாய்ண்ட். இத கெட்டியாப் புடிச்சுக்க'ன்னு சொன்னாய்ங்க. புடிச்சிக்கிட்டேன்.''

**நல்லா வந்துட்டிருக்கும் போது, 'மிருகம்' மாதிரி ஆபாச காமெடி தேவைதானா?**

''தெரியாமப் பண்ணிட்டேன்ணே. இனி அது மாதிரி பண்ண மாட்டேன்ணே. ஜனங்க நம்மகிட்ட என்ன எதிர்பார்க்கறாங்களோ அதைத் தர முடிஞ்சா இருக்கேன்ணே.''

**இனி தொடர்ந்து ஹீரோதானா?**

''அண்ணே வேணாம்ணே! குசும்பாக்கூட அப்படிக் கேக்காதீய. நான் ஒரு நடிகன்ணே. எந்த வேஷம் கொடுத்தாலும் நடிக்கணும். அதுதான் அழகு. ஹீரோ வேஷமெல்லாம் அப்பப்ப வரும், போகும்... அதையெல்லாம் கணக்குல எடுத்துக்கப்படாது.''

**கடவுள் படத்துல காதலிக்காகத் தவமிருந்தீங்க. நிஜத்துல எப்படி?**

''அட அதெல்லாம் கன

- மு.மாறன்

# கால் கிலோ காதல் அரை

**பா. ராகவன்**

பெருமாள் சாமி ஓர் அயோக்கியன். இது வகுப்புக்கே தெரியும். பள்ளிக்கே தெரியும். ஆனாலும், தமிழ் ஐயா எப்படி அவன் சொன்னதை அப்படியே நம்பினார்?

மறுநாள் தமிழ் வகுப்பு ஆரம்பித்ததும், வகுப்பறைக்கு வெளியே, தன்னை அவர் முட்டி போட்டு நிற்கச் சொன்னபோது, பத்மநாபன் தீவிரமாக யோசித்தான். என்ன வாவது செய்து பழிவாங்கிவிட வேண்டும். இல்லாவிட்டால் ஆன்மா அமைதியுறாது.

ஆனால், வேறு விதமாக யோசித்துப் பார்த்தால் பெருமாள் சாமி தன்னைப் பற்றிச் சொன்ன புகார்களில் பாதிக்குமேல் உண்மையாகவும் இருக்கிறது. சார், பத்ம நாபன் வளர்மதிய லவ் பண்றான் சார். உண்மை. அவளுக்கு லெட்டர் குடுத்தான் சார். உண்மை. அவ வயசுக்கு வந்தப்ப மயில் ஜோடிச் சாங்கல்ல? அந்த விசேஷத்துக்கு இவன் போனான் சார். சந்தேகமில்லை.

ஆனால், இதற்குமேல் அவன் கூறிய வைதான் தவறான தகவல்கள். வகுப் பறையில் எப்போதும் வளர்மதியையே பார்த்துக்கொண்டிருக்கிறான். காதல் கவிதைகளாக எழுதிக் குவிக்கிறான். வளர் மதியுடன் ராஜலட்சுமி திரையரங்குக்குப் போகிறான். அவள் தனக்கு முத்தம் கொடுத்ததாக நண்பர்களிடம் சொல்லி யிருக்கிறான்.

''முளைச்சி மூணு இலை விடல'' என்று தமிழ் ஐயா சொன்னார்.

''பிச்சுப்புடுவேன் படுவா. நாளைக்கு வர்றப்ப உங்கப்பாவக் கூட்டிக்கிட்டு வரணும். தெரிஞ்சுதா?''

''சார், இவன் பொய் சொல்றான் சார். அப்படியெல்லாம் நான் சொல்லவும் இல்ல. செய்யவும் இல்ல சார். நீங்கவேணா வளர்மதியையே கேட்டுப்பாருங்க சார்.''

தமிழ் ஐயா முறைத்தார். ஸ்டாஃப் ரூமுக்குள் நுழைந்த வேறு சில ஆசிரியர் கள் விஷயத்தின் சுவாரசியத்தால் கவரப் பட்டு, ''என்ன பழனி?'' என்று அவரைக் கேட்டார் கள்.

''பசங்க ஜோடி தேடுறானுக.''

''நைன்த் பி தானே? அட்டண்டன்ஸ் ரிஜிஸ்தர்ல இருக்கற அத்தன பேருக்கும் ஆளுக்கொரு டாவு வெச்சிருக்கானுக.'' தலையில் அடித்துக் கொண்டு நகர்ந்தார் பாண்டுரங்கன் சார்.

பத்மநாபனுக்கு அவமானமாக இருந் தது. காதல் எத்தனைக்கு எத்தனை சுகமா னதோ, அதே அளவு வலி தரக்கூடியதும். தமிழ் ஐயா உள்ளங்கைகளை நீட்டச் சொல்லி தலா மூன்று அடிகள் கொடுத்தார்.

''அசிங்கமா இருக்கு. க்ளாசுல கட்டிப் பொறண்டு அடிச்சிக்கறது; கேட்டா காதல் கத்திரிக்கான்றது. படிக்கற வயசுல இப்பிடி அலைபாயவிட்டீங்கன்னா, பின்னால மூட்ட தூக்கணும் தெரிஞ்சுதா? உப்பு மண்டி தவிர வேற எதுலயும் வேலதர மாட்டான் பாத்துக்கோ'' என்று சொன்னார்.

ஐயா சொல்வதில் தவறேதுமில்லை.





# கிலோ கனவு

பத்மநாபனுக்கு லேசாக அழுகை வந்தது. அவனது அப்பாவும் இதையேதான் அடிக்கடி சொல்லுவார். உப்புமண்டியில் மூட்டை தூக்குதல் பற்றி. அவர் தன் வயசுக் காலத்தில் ஒழுங்காகப் படித்தவர். திரு.வி.க.வின் அழகு என்பது யாதுவையெல்லாம் உருப்போட்டுப் பரீட்சை எழுதி, முதல் வகுப்பில் தேர்வானதன் விளைவுதான் சோழிங்கநல்லூர் மோட்டார் சைக்கிள் கம்பெனியில் அவரால் செக்யூரிட்டி உத்தியோகம் பார்க்க முடிகிறது.

ஆனால், அப்பா காதலித்ததில்லை. அபூர்வமாக ஒருநாள் கிளம்பி, குடும்பத்துடன் ராஜலட்சுமி திரையரங்கத்தில் 'அலைகள் ஓய்வதில்லை' படத்துக்குப் போனபோது, சற்றும் ரசனையில்லாமல் பாடல் காட்சிகளில் வெளியே போய்விட்டவர். ''என்னடா எனவு எப்பப்பாரு அந்தக் கறுப்பியப் பாத்து நாக்கத் தொங்கப் போட்டுக்கிட்டு அலையுறான்'' என்று சொன்னார். கடவுள் ஏன் அப்பாக்களுக்குக் காதலைப் புரியவைப்பதேயில்லை?

''அவங்களுக்கெல்லாம் கல்யாணம் ஆயிடுச்சிடா. அதான் தப்பு'' என்று கலிய மூர்த்தி ஒருநாள் சொன்னான். உண்மையாகவும் இருக்கலாம். கல்யாணம்

## உயிர் வளர்க்க 'புத்தகம்!'

பட்டுக்கோட்டையிலிருந்து முத்துப் பேட்டை செல்லும் சாலையில், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் மணிமண்டபம் எதிரே, சாலையோரத்தில் அமைந்துள்ளது அந்தப் புத்தகச் சோலை. கடந்த இரண்டரை ஆண்டுகளாக அங்கு புத்தக வியாபாரம் செய்து வருபவர் அ.சின்னசாமி. வயது எண்பது! பதினைந்து வருடங்களுக்கு முன்பாக இல்லறத்திலிருந்து விலகி, 'சாமியாரா'க உருமாறி ஊர் ஊராகச் சுற்றி வந்தவர்.

''காடு கரையில கஷ்டப்பட்டு வேலை வெட்டி பார்த்தவன் நான். குடும்பத்துல வெறுப்பாகி சாமியாராப் போனதுமே, எங்கேயும் பிச்சையெடுத்து மட்டும் சாப்பிடக் கூடாதுன்னு முடிவு பண்ணிட்டேன். அப்போ கையில வைச்சிருந்த பணத்தை வைச்சிப் புத்தகங்களை வாங்கி ஊர் ஊராப் போயி ரோட்டுல கடைபரப்பி வியாபாரம் பண்ண ஆரம்பிச்சேன். அதுக்கு

செய்துகொள்வதற்கு முன்னால் கண்டிப்பாகக் காதலித்துவிட வேண்டும். வளர்மதி தன் காதலை ஏற்றுக் கொண்டுவிட வேண்டும். வேறெதுவும் வேண்டாம். புளகன் பெருமாள் சாமி சொன்னதுபோல் முத்தமெல்லாம்கூட அவசியமில்லை. ஒரு உணர்வு. அது போதும். அவள் என்னை அங்கீகரிக்கிற பெருமிதம் ஒன்றுபோதும். மற்றதெல்லாம் அனாவசியம்.

ஆனால், அதெல்லாம் அப்புறம். நாளைக்கு அப்பாவை அழைத்துவரச் சொல்லியிருக்கிறாரே. அதற்கு என்ன செய்வது?

முட்டி போட்டு நின்றவண்ணம் யோசித்துக்கொண்டிருந்தவனுக்குச் சட்டென்று ஓர் எண்ணம் தோன்றியது. வகுப்பு முடியும்வரை காத்திருந்தான். மணியடித்து தமிழ் ஐயா வெளியே வந்தபோது ஒரு கணம் நின்று அவனைப் பார்த்தார். தருணம்!

பத்மநாபன் சட்டென்று எழுந்து ஓடி அவர் காலில் விழுந்தான்.

''மன்னிச்சிடுங்க சார். இன்னமே என்னப்பத்தி யாரும் உங்களாண்ட கம்ப்ளெய்ண்டு குடுக்கமாட்டாங்க. முழுப்பரீட்சைல நான் க்ளாஸ் ஃபர்ஸ்டு வந்து காட்டுறேன். என் கண்ணத் தொறந்துட்டீங்க சார்!''

பரவாயில்லை. சந்தர்ப்பத்துக்கு ஏற்பக் கண்ணில் கொஞ்சம் நீரும் வந்து உதவுகிறது.

தமிழ் ஐயா பரவசமானார். சட்டென்று குனிந்து அவனைத் தூக்கினார். ''குடுமி? நீயா பேசுறே?''

''ஆமா சார். என் கண்ணத் தொறந்துட்டீங்க சார்.''

''சிங்கம்டா நீயி. எந்திரிச்சி கண்ணத் தொடச்சிக்க. இந்த மனமாற்றம்தாண்டா வாழ்க்கைல முன்னுக்கு வர உதவும். டேய், பாத்துக்கங்கடா. எல்லாப் பசங்களும் இவனமாதிரி இருக்கோணும். காந்திகூட இப்படித்தான். தப்பு செய்யத் தயங்காமத்தான் இருந்திருக்காரு. அப்பால அரிச்சந்திரன் டிராமா பாத்துத் திருந்தினாரு. தெரியும்ல?''

பத்மநாபனுக்கு நாக்கு துறுதுறுத்தது. காந்தி தன் பள்ளி நாள்களில் யாரையேனும் காதலித்திருக்கிறாரா? கடிதம் கொடுத்திருக்கிறாரா? அடிக்கடி ஐயா காந்தியை உதாரணம் காட்டுகிறார். என்றைக்காவது கேட்டுவிட வேண்டும்.

இவ்வாறு யோசிக்கும்போதே, காதலிப்பது தவறா என்றும் ஒரு கேள்வி வந்தது. வாய்ப்பே இல்லை. பெரியவர்களுக்கு மட்டும்தான் அது தவறு. தாத்தாவானபிறகு எடுத்த புகைப்படங்களே உலகின் பார்வைக்குப் பெரும்பாலும் கிடைத்தாலும் காந்தி, தன் சின்ன வயதுகளில்தான் அதனைச் செய்திருக்க வேண்டும். என்றைக்

அப்புறமாகத்தான் புஸ்தகங் களைக் கொஞ்சம் நெறையவே வாங்கிப் போட்டு, இதே மரத்தடியில இப்ப இரண்டரை வருஷமா வியாபாரம் பண்ணி வர்றேன். புஸ்தக வியாபாரம் பண்ணி உயிர் வாழ்றது நல்ல விஷயம்தானே?'' என்கிறார் அ.சின்னசாமி.

**- இருள்நீக்கியான்**



காவது அந்த ரகசியத்தைத் தெரிந்து கொண்டுவிடவேண்டும்.

ஒருவழியாக அப்பாவை அழைத்து வருவது என்னும் பெருந்தொல்லையிலி ருந்து தற்காலிகமாகத் தப்பித்தது பற்றி பத்மநாபன் மிகுந்த மகிழ்ச்சியடைந்திருந் தான். அடுத்த வகுப்பில் அடிக்கடி திரும் பித் திரும்பி பெருமாள் சாமியைப் பார்த் துக்கொண்டான். எப்போதும்போல் அவன் முறைத்துக்கொண்டே இருப்பதைக் கண்ட வன், 'மவனே, இன்னிக்கு ஒனக்கு இருக் குது பாரு' என்று மனத்துக்குள் கறுவிக் கொண்டான்.

உணவு இடைவேளையில் அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு நேரே மைதானத்துக்கு ஓடினான். பெருமாள் சாமியும் அவனது நண்பர்களான பிற படிக்காத பசங்களும் அங்கே மாமரத்து நிழலில்தான் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருப்பது வழக் கம். என்னவாவது செய்து அவனைக் கதற விட்டுவிட வேண்டும் என்று பத்மநாபன் முடிவு செய்துகொண்டான்.

அவன் மைதானத்தை ஒட்டிய மாம ரத்தருகே சென்றபோது பெருமாள், மரத்தின் மேலே இருப்பது தெரிந்தது. பெரிய மரம்; நிறைய கிளைகள்; சீசனுக்கு ஆயிரம் காய்கள் கொடுக்கிற மரம்.

பத்மநாபன் மரத்தடியில் போய் நின்ற போது பெருமாள் சாமியின் நண்பர்கள் அவனை முறைத்தார்கள்.

''ஏய், என்ன?''

பத்மநாபன் பதில் சொல்லவில்லை. ஒரு கணம் யோசித்தான். விறுவிறு வென்று மரத்தில் ஏறினான்.

''டேய், அவன் வர்றான்டா'' என்று கீழிருந்து குரல் கேட்டது. பெருமாள் திரும்பிப் பார்க்கக்கூட பத்மநாபன் அவ காசம் தரவில்லை. அவன் நின்று, பறித்துக் கொண்டிருந்த கிளைக்குத் தாவியேறி பொளேரென்று அவன் கழுத்தில் ஒரு குத்து விட்டான்.

அதிர்ச்சியடைந்த பெருமாள், மாங்காய் பறிப்பதை நிறுத்திவிட்டு பத்மநாபனின் கழுத்தைப் பிடித்தான். இரண்டு பையன் களின் கனம் தாங்கக்கூடிய கிளைதான்.

ஆனாலும், ஆடியது. இருவரும் விளைவு குறித்துச் சற்றும் சிந்திக்காமல் ஒருவரையொருவர் தாக்கிக்கொள்ளத் தொடங்க, செய்தி பரவி, பையன்களும் பெண்களும் மரத்தடியில் கூடிவிட் டார்கள்.

''டேய், டேய், கீழ இறங்குங்கடா. இங்க வந்து அடிச்சிக்கங்கடா'' என்று ஜெயலலிதா சத்தம் போட்டாள்.

''விழுந்தா எலும்பு தேறாதுடா'' என்று வளர்மதி சொன்னாள். பத்மநாபன் அவ ளைப் பார்த்தான். கோபம் மேலும் பீறிட்டது. தன் முழு பலத்தையும் பிர யோகித்து பெருமாள் சாமியைப் பிடித்துத் தள்ளினான். நியூட்டனின் மூன்றாவது விதிப் பிரகாரம், அவனும் பின்புறமாகக் கீழே விழுந்தான்.

நல்ல அடி.

**(தொடரும்)**

# இதயத்தின் சொற்கள்



**கனவு மெய்ப்பட வேண்டும் - தமிழருவி மணியன், தென்திசை, 19, ஸ்ரீநிவாச ரெட்டி தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.100/-**

சமூக நலன் சார்ந்த சமதர்மத்தையே இலட்சியக் கனவாகக் கொண்டு வாழ்ந்தவர் பாரதி. கவிஞர்களின் கவிதைகள், அறிஞர்களின் விமர்சனங்களோடு, பாரதியின் ஒவ்வொரு சமூக, இலக்கிய அசைவையும், அவருடைய இதயத்தின் சொற்களையும் நூலாசிரியர், விறுவிறுப்பான நடையில் வெளிப்படுத்தியுள்ளார்.




**தமிழ், ஆங்கிலம் அடிப்படை ஆரம்ப இலக்கணம் - ஒப்பீடு - எம்.பாலகிருஷ்ணன், எம்.பி.ஜே. பப்ளிகேஷன், ப.எண்.45, பு.எண்.23, செகண்ட் அவென்யூ, சென்னை - 83. விலை ரூ.75/-**

தமிழ், ஆங்கிலம் இரு மொழிகளில் நன்கு எழுதவும் பேசவும் தேவையான அடிப்படை இலக்கணக் கூறுகளைத் தெளிவாக, எளிமையான முறையில் சித்திரிக்கும் நூல். ஆங்கில இலக்கணத்தை, தமிழ் மொழியின் இலக்கணத்துடன் ஒப்பிட்டு எழுதப்பட்டுள்ள புத்தகம், தமிழ் மீடியம் மாணவர்களுக்கு ஆங்கிலம் படிப்பிக்க, ஆசிரியர்களுக்கு உதவும் வகையில் வெளிவந்துள்ளது.




**பார்க்கின்ஸன்ஸ் பயங்கரம் - டாக்டர் ஏ.வி.ஸ்ரீனிவாசன், நலம், 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 18. விலை ரூ.50/-**

பார்க்கின்ஸன்ஸ் நோய் பற்றி விவரித்துக் கூறும் நூல். நோயின் அறிகுறிகள், நோய்க்கான காரணங்கள், நோயைக் கண்டறிதல், சிகிச்சை முறைகள், கேள்வி - பதில்கள் என பல தகவல்களை உள்ளடக்கியது. நோயாளிகளுக்கு மட்டுமல்லாது அவர்களுடைய குடும்பத்தினருக்கும் பயன்படும் நூல்.



**தர்ம ச்ரத்தையும் பகவத் பக்தியும் - சாரதா ரமணன், அம்மன் தரிசனம் பப்ளிகேஷன்ஸ் (பி)லிட்., 21, வெங்கட் நாராயணா ரோடு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.30/-**

ஸ்ரீ பாரதி தீர்த்த ஸ்வாமிகள் அருளிய அனுக்ரஹ பாஷணத்தின் தொகுப்பு. மனிதப் பிறவியின் சிறப்புகள், அதில் நாம் நோக்கும் பிரச்னைகள், அவற்றைச் சமாளிக்கும் வழிகள், அதற்கான சக்தியும் மனோ நிலையையும் பெறும் வழிகள் ஆகியவை ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களுடன் வழங்கப்பட்டுள்ளன.

- மித்ரா

# நீங்கள் கேட்டவை

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

**? ஒரே நாளில் இந்தியாவின் புகழை உச்சத்துக்குக் கொண்டு சென்ற பி.எஸ்.எல்.எல் வி சி 9 பற்றி...?**

! முதல் விண்கல ஏவுதல் முயற்சி தோல்வியுற, இஸ்ரோ விஞ்ஞானிகள் துவண்டதையும், பின்னர் அத்தோல்வி குறித்த பத்திரிகை கார்ட்டூன்களைக் கண்டு சிரித்து, மனம் தேற்றிக்கொண்டதையும் வெகு சமீபத்தில் அப்துல் கலாம் ஒரு மேடையில் எடுத்துரைத்தார். வெகு சில ஆண்டுகளுக்குள் அத்தோல்வி விண்ணளாவிய வெற்றியாக மாறியிருக்கிறது.

● எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

**? ஆப்பாகக் கலக்கும் 'மானாட மயிலாட' நிகழ்ச்சி குறித்து...?**

! மானையும் மயிலையும் சூப்பராக அவமானப்படுத்துகிற மனிதக் கலக்கம்!

● கே.ஆர்.ஜெயலட்சுமி, சென்னை - 11

**? 'பணப் புழக்கம் அதிகமாக இருப்பதால் விலைவாசி உயர்கிறது' என்று அன்பழகன் (தமிழக நிதியமைச்சர்) கூறியிருப்பது பற்றி?**

! பணப்புழக்கம் அதிகரித்த அளவுக்கு அதை ஈடு செய்ய உற்பத்தி அதிகரிக்கவில்லை; அதனால்தான் விலைகள் உயர்கின்றன. அன்பழகன் அரைகுறை விளக்கம் தந்திருக்கிறார். எனினும், 'வாங்கும் சக்தி அதிகரித்தால் விலைவாசி உயர்வு பாதிக்காது' என்ற கருணாநிதியின் விளக்கத்தை விடவும் இது எவ்வளவோ தேவலாம்!

## மாவட்டம்தோறும் முதியோர் இல்லங்களாமே...?



● அதி உளறல் அண்ணல்!



● வனப்பெற்ற கண்டனம்!



● 'கிரீமி' வேலை வாய்ப்புகள்!

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? மாவட்டம்தோறும் முதியோர்**

**இல்லங்கள் அமைக்கப் போவதாக அமைச்சர் பூங்கோதை சொல்கிறாரே... இது எதைக் காட்டுகிறது?**

! ஆயுட் காலம் கூடுதலாகி மனித நேயம் குறைந்துவரும் சூழலை உணர்த்துகிறது. நிற்க. இந்த முதியோர் இல்லங்களை நிர்வகிக்கப் போகிறவர்கள் யார்? வீட்டில் அனுபவிக்கும் கொடுமைகளே மேல் என்ற நிலை, இந்த முதியோர் இல்லங்களில் தோன்றக் கூடாதே என்ற கவலை எழுகிறது.

● **பழ.கவிதா சிவமணி,**
**புன்செய்ப்புளியம்பட்டி**

**? 'உடை விஷயத்தில் எனக்கு விருப்பமானதைத்தான் நான் அணிய முடியும்' என்று நமீதா கூறுவது சற்று ஆணவமாகத் தெரிகிறதே?**

! உடை விஷயத்தில் தனக்கு விருப்பமானதை வீட்டினுள் அணிவது ஒன்றும் தவறில்லை. ஆனால் பொதுஇடத்துக்கு வரும் போது, நமது உடை சமூக விதிகளுக்குட்பட்டும், காண்போரை அசௌகரியத்துக்குள்ளாக்காமலும் இருப்பது மிக அவசியம். இதனை மீறுவதும், மீறுவதை நியாயப்படுத்துவதும் கவனத்தை ஈர்க்கும் சிறுபிள்ளைத்தனம்!



* வலுவிழக்கும் எதிர்ப்பு!

● **மதுரை முருகேசன், மானம்புச்சாவடி**

**? அரசியல் கட்சிகளின் வருமான விவரங்களை மக்கள் கணக்கு கேட்டு அறிந்துகொள்ளும் திட்டத்துக்குக் கட்சிகளின் வரவேற்பு இல்லாதது எதைக் காட்டுகிறது?**

! 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்பதை!

● **தி.வி.கிருஷ்ணமூர்த்தி,**
**மும்பை - 5**

**? 1983ல், ஜம்மு - காஷ்மீரில் புனல் மின் நிலையம் அமைக்க 183 கோடி ரூபாயில் திட்டம் போடப்பட்டு அடிக்கல் நாட்டப்பட்டது. ஆனால் இப்போதுதான் அது முடிந்திருக்கிறது - ரூ. 5228 கோடி செலவில்! இது என்ன கணக்கு?**

! தவறான திட்டமிடல்தான் காரணம். மக்களைக் கவர ஏகப்பட்ட திட்டங்களை அறிவிக்கிறார்கள். நிதி ஒதுக்குவது என்று வரும்போது தவிக்கிறார்கள். நிதிப் பற்றாக்குறையால் கால தாமதம்; கால தாமதத்தால் விலைவாசி உயர, திட்டச் செலவு அதிகரிக்கிறது. வரிப்பணம் வீணாகிறது. இதுதான் இன்று பாரதத்தின் பரிதாபநிலை.

● **ஆர்.நாகராஜன், சென்னை - 117**

**? 'விலைவாசி உயர்வுக்கு இந்தியாவில் நடுத்தர வர்க்கத்தின் வளர்ச்சியே முக்கிய காரணம்' என்று அமெரிக்க அதிபர் புஷ் சொல்வது சரியா?**

! சரிதான். அமெரிக்க ஜனாதிபதிகளுள் 'அதிக உளறல் மன்னர்' என்று பெயர் வாங்கிய அவர், அப்படிப் பேசியது சரிதான்.

● **இரா.சம்பத்குமார்,**
**திருவள்ளூர்.**

**? அமளியில் ஈடுபட்ட எம்.பிக்கள் மீதான சபாநாயகரின் நடவடிக்கை ஏற்கக் கூடியதுதானே?**

! நிச்சயமாக. அறிவுபூர்வமான விவாதமின்றி அமளியில் ஈடுபட்டு மக்களின் வரிப்பணத்தைக் கோடிக்கணக்கில் விரயமாக்கும் எம்.பிக்கள், உதடு மீது விரல் வைத்து சபாநாயகருக்கு எதிர்ப்பு தெரிவிப்பது நூதன அபத்தம். தமது நடவடிக்கையை வாபஸ் பெறும் நிலைக்கு சபாநாயகர் தள்ளப்பட்டிருக்கலாம். ஆனால், அவருடைய கண்டனம் வாபஸ் ஆகவில்லை; வலுப்பெற்றுள்ளது.

● **எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்**

**? கோயில்களில் தியானப் பயிற்சி அளிக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளதே?**

! தியானப் பயிற்சி நல்லதுதான். அதற்கு முன் தியானப் பயிற்சியாளர்கள் பயிற்று

விக்கப்பட வேண்டும். இல்லையெனில் தியானப் பயிற்சி திராபைப் பயிற்சியாகி விடும்.

● கே.ரெங்கநாதன், திருவாரூர்

? 'தமிழகத்தில் கடந்த இரண்டு ஆண்டுகளில் 13 புரிந்துணர்வு ஒப்பந்தங்கள் கையெழுத்தாகியுள்ளதால், ஒரு லட்சத்து நாற்பத்திரண்டாயிரம் இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பு கிடைக்கும்' என்கிறாரே தமிழக முதல்வர்...

! மிக நல்ல விஷயம்தான். ஆனால்,

கிராக | நீங்கள் கேட்டவை



● சிறுபிள்ளை வாதம்!

அவை பெரும்பாலும் ஹைடெக் நிறுவனங்கள் என்பதால் நன்கு படித்த, பயிற்சி பெற்ற பிரிவினருக்கே அவ்வாய்ப்புகள் போய்ச் சேரும். கிராம மக்களுக்கும், விவசாயம் சார்ந்து வாழ்வோருக்கும்தான் நிரந்தர வருமானத்துக்கான தீர்வுகளே பிறப்பதில்லை.

● கே.ஜெயலட்சுமி, சென்னை - 20

? அமெரிக்காவுடனான அணுசக்தி ஒப்பந்தத்தைக் கைவிட்டால் இந்தியாவுக்குப் பெரும் இழப்பு ஏற்படும் என்கிறாரே முன்னாள் பாதுகாப்பு ஆலோசகர் பிரஜேஷ் மிஸ்ரா?

! இந்த ஒப்பந்தத்தால் இந்தியாவின் பாதுகாப்புக்கும் இறையாண்மைக்கும் பங்கம் ஏற்படும் என்பதுதான் முக்கிய எதிர்ப்பு. முன்னாள் பாதுகாப்பு ஆலோசகர் இவ்வாறு பேசியிருப்பதால் எதிர்ப்பு வலுவிழக்கிறது. ஆனால், எதிர்ப்பாளர்கள் (கம்யூனிஸ்டுகள்) வலுவிழக்கவில்லையே! ஆதரவு வாபஸ் மிரட்டல் காரணமாக ஒப்பந்தம் உறங்கப் போய்விட்டதே! ○

❒ ரூ. 100 பரிசு பெறுபவர்:
**கா.நா.இராஜேஸ்வரன்,**
மொரட்டுப்பாளையம்

* ரூ. 50 பரிசு பெறுபவர்:
**தி.வி.கிருஷ்ணமூர்த்தி,**
மும்பை

## நெடுங்கதை



# ஒற்றை

ஒரு சமயம் நான் பாபநாசத்துக்குச் சென்றிருந்தேன். எதற்காகப் போனேன் என்று கேட்டால் நீங்கள் ஒரு வேளை சிரிப்பீர்கள்; சிலர் அனுதாபப் படுவீர்கள். பி.ஏ. பரீட்சைக்கு மூன்று தடவை போய் மூன்று தடவையும் தவறிவிட்டேன். இதனால் வாழ்க்கை கசந்து போயிருந்தது. ஒரு மாதிரி பிராணத் தியாகம் செய்துவிடலாம் என்ற முடிவுக்கே வந்துவிட்டேன். திடீர் திடீரென்று நமக்குத் தெரிந்தவர்கள் யார் யாரோ இறந்து போய்விட்டதாகக் கேள்விப் படுகிறோம். ஆனால், நாம் அவர்களைப் பின்பற்றலாம் என்றால், அதற்கு வழிவகை தெரிவதில்லை. யோசித்து யோசித்து ஒரு முடிவுக்கு வந்தேன். பாபநாசத்தில் கல்யாணி தீர்த்தம் என்பதாக ஓர் இடம் இருக்கிறதென்றும், அதிலேதான் ஆசிரியர் வ.வே.சு. அய்யர் உயிரை இழந்தார் என்றும் கேள்விப்பட்டிருந்தேன். அந்தப் பெரியாரைப் பின்பற்றலாம் என்று எண்ணிக்கொண்டுதான் பாபநாசம் போனேன்.

இரண்டு காரணங்களினால் நான் உத்தேசித்த காரியத்தை நிறைவேற்ற முடியவில்லை. முதலாவது, அந்தக் கல்யாணி தீர்த்தம் இருக்கிறதே, அது பார்க்க மிகப் பயங்கரமாயிருந்தது. தென்னைமர உயரத்திலிருந்து மூன்று தண்ணீர்த் தாரைகள் 'ஹோ' என்ற சத்தத்துடன் கீழேயுள்ள அகன்ற மான பள்ளத்தில் விழுந்துகொண்டிருந்தன. அந்தப் பள்ளத்தில் தண்ணீர் நிறைந்து ததும்பி அலைமோதிக் கொண்டிருந்தது. சிறிய மரக்கிளை ஒன்று அந்தடாகத்தில் விழுந்து அங்குமிங்கும் சுழன்று அலைக் கழிக்கப்படுவதைப் பார்த்தேன். இதிலே விழுந்தால் நம்முடைய தேகமும் இப்படித்தானே அலைக்கழிக்கப்படும் என்று நினைத்தபோது என் தைரியம் குலைந்து விட்டது. அன்னை பெற்றெடுத்த நாளிலிருந்து எத்தனை கஷ்டப்பட்டு வளர்த்த

## அமரர் கல்கி




அங்கிருந்து இறங்கி வந்து, கீழே பாபநாசம் கோயிலுக்குப் பக்கத்தில் பளிங்கு போன்ற தெளிந்த நீரோடும் நதியின் கரையில் உட்கார்ந்து யோசித்தபோது, எதற்காக உயிரை விட வேண்டும் என்றே தோன்றிவிட்டது. நதியின் வெள்ளத்தில் மந்தை மந்தையாகத் தங்க நிற மீன்கள் நீந்தி விளையாடிக்கொண்டிருந்தன. அவை மேலே வரும்போதும் புரண்டு விழும்போதும் என்னமாக ஜொலித்தன! இந்த மீன்கள் அவ்வளவு குதூகலமாக விளையாடிக்கொண்டு திரிகின்றனவே, பி.ஏ. பரீட்சை தேறாததினாலே இவற்றுக்கு என்ன குறை வந்துவிட்டது? இதோ இந்த மரங்களில் எத்தனை விதமான பட்சிகள் எவ்வளவு ஆனந்தமாகப் பாடிக்கொண்டு வாழ்கின்றன? இவை பி.ஏ. பரீட்சையில் தேறவில்லையே! இதோ இந்தக் குரங்குகளைத்தான் பார்க்கலாமே, பி.ஏ. பட்டம் பெறவில்லையே என்று கொஞ்சமாவது கவலைப் படுகின்றனவா? ஆணும் பெண்ணும் எவ்வளவு உல்லாசமாக மரங்களின் மீது ஏறியும் இறங்கியும் கிளைக்குக் கிளை பாய்ந்தும் வாழ்கின்றன. தாய்க் குரங்கு அந்தக் குட்டிக் குரங்கையும் சேர்த்து அணைத்துக்கொண்டு மரத்துக்கு மரம் தாவுகிற அழகை என்னவென்று சொல்வது?

அறிவில்லாத பிராணிகளும் பட்சிகளும் இவ்வளவு உல்லாசமாக வாழ்க்கை

உடம்பு இது? இதற்கு எத்தனை எண்ணெய், எத்தனை சோப்பு, எத்தனை ஆடை அலங்காரம், எத்தனை வகையான அன்னபானம், அடடா! இதைப் புகைப்படம் பிடிப்பதற்காக மட்டும் எத்தனை செலவு! இவ்வாறெல்லாம் பேணி வளர்த்த உடம்பு, அந்தப் பயங்கரமான தடாகத்தில் சுற்றிச் சுழன்றுகொண்டிருப்பது என்னும் எண்ணத்தை என்னால் கொஞ்சம்கூடச் சகிக்கவே முடியவில்லை.

நடத்தும்போது நாம் மட்டும் பி.ஏ. பரீட்சை தேறவில்லை என்பதற்காக ஏன் உயிரை விட முயற்சிக்க வேண்டும்?

இத்தகைய முடிவுக்கு வந்து திரும்பித் திருநெல்வேலி போய்ச் சேர்ந்தேன். சென்னைக்கு இரண்டாம் வகுப்பு டிக்கெட் எடுத்துக்கொண்டு ரயில் வண்டியில் ஏறினேன்.

ரயில் என்னமோ வேகமாகத்தான் போய்க்கொண்டிருந்தது. ஆனால், என் மனது அதைவிட வேகமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. ஒரே இடத்தில் உட்கார்ந்திருப்பது கஷ்டமாயிருந்தது. அன்றைக்குப் பாருங்கள், என்ன காரணத்தினாலோ அந்த வண்டியில் கூட்டமே இல்லை. உயர்ந்த வகுப்பு வண்டிகள் வழக்கத்தைவிட அதிகமாகவே கோத்திருந்தார்கள் போலிருக்கிறது. நான் ஏறியிருந்த இரண்டாம் வகுப்பு வண்டியில் நான் ஒருவனேதான். ஆகையால், உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துப்போய்விட்டது. ரயில் நின்ற ஒவ்வொரு நிலையத்திலும் வண்டியிலிருந்து கீழே இறங்கிப் பிளாட்பாரத்தில் சிறிது நேரம் உலாவிவிட்டு, ரயில் புறப்படும் சமயத்தில் மறுபடியும் ஏறிக்கொள்வேன். ரயில் நிலையங்களில் சாதாரணமாய் நடமாடும் பலதரப்பட்ட ஜனங்களைப் பார்ப்பதில் ஒருவித உற்சாகம் ஏற்பட்டது.

விருதுநகர் சந்திப்பில் அந்த உற்சாகம் சிகரத்தை அடைந்தது. ஆம்; முதலில் நான் பார்த்தது, - என் கண்ணையும் கவனத்தையும் கவர்ந்தது - ஓர் ஒற்றை ரோஜாப்பூதான்! அந்த ஒற்றை ரோஜாப்பூ ஒரு பெண்மணியின் எடுத்துக்கட்டிய கூந்தல்மீது வீற்றிருந்தது. 'கொலு வீற்றிருந்தது' என்றும் சொல்லலாம். அவ்வளவு இலட்சணமாயிருந்தது. தலை நிறைய ஒரு சுமைப் பூவைத் தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு அலையும் சென்னை நகர்ப் பெண்மணிகள் பலரை நான் பார்த்திருக்கிறேன். 'என்ன அநாகரிகம்? தலையில் புல்லுக் கட்டைச் சுமப்பதுபோல் சுமக்கிறார்களே?' என்று எண்ணியிருக்கிறேன். அதற்கெல்லாம் மாறாக இவ்வளவு நாஸூக்காகவும் நாகரிகமாகவும் கூந்தலில் ஒற்றை ரோஜாப்பூ அணிந்திருக்கும் பெண்மணி யாரோ? - என்று அறிய ஆவல் உண்டாயிற்று. ரயிலில் நான் இருந்த வண்டிக்கு இரண்டு வண்டிக்கு அப்பால் அவள் இருந்தாள். அவள் தலை வெளியில் நீட்டப்பட்டிருந்தது. ஆனால் முகம் எனக்கு நேர் எதிர்ப்புறமாகத் திரும்பியிருந்தது. அந்தப் பெண்மணியின் முகம் எப்படியிருக்குமோ, கூந்தலில் சூடிய ஒற்றை ரோஜாப்பூவினால் ஏற்பட்ட நல்ல அபிப்பிராயம், முகத்தைப் பார்த்ததும் மாறிவிடுமோ என்ற ஐயத்துடனேயே அந்தப் பக்கம் போனேன். ஏதோ ஒரு கதையில் படித்திருக்கிறேன். ஒருவன் ஒரு பெண்ணின் கரத்தைப் பார்த்து அதன் அழகில் சொக்கிப் போனான்! அவள் முகத்தைப் பார்த்ததும் பயங்கரமும் அருவருப்பும் அடைந்தான். இம்மாதிரி கதி எனக்கும் ஏற்பட்டுவிடுமோ?

**அபூர்வ சௌந்தர்யமுள்ள அவள் முகத்தை, என் பக்கம் திருப்பினாள்!**



அருகில் சென்றபோது சட்டென்று அவள் முகம் என் பக்கம் திரும்பியது. ஆகா! நான் பயந்தது என்ன முட்டாள்தனம்! பார்க்கிறவர்களின் கண்களில் வந்து தாக்கி வேதனை உண்டாக்கும் சௌந்தர்யமும் உண்டோ! அத்தகைய அபூர்வ சௌந்தர்யமுள்ள முகத்தை அவள் என் பக்கம் திருப்பினாள். ஒரு புன்னகையும் புரிந்தாள். நிலா வெளிச்சத்தில் முல்லை பளி

ரென்று மலர்ந்தது போலிருந்தது. நான் எப்பொழுதும் சங்கோசமோ கூச்சமோ அதிகம் இல்லாதவன்தான். ஆயினும், அவளிடம் அப்போது நானாக ஒரு வார்த்தை பேச முயன்றிருந்தால் என் பிராணனே போயிருக்கும். பாபநாசத்தில் நடந்திருக்க வேண்டியது விருதுநகர் ரயில்வே நிலையத்தில் நடந்திருக்கும். அந்த மாதரசி அதற்கு இடம் வையாமல் என்னிடம் அவளாகவே பேசிவிட்டாள். ''தயவுசெய்து சிற்றுண்டிச் சாலைக்காரனை எனக்கு ஒரு கப் டீ கொண்டு வரும்படி சொல்ல முடியுமா?'' என்றாள். ''பேஷாகச் சொல்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு வேகமாக நடந்து போய் ஸ்பென்ஸர் ஆள் ஒருவனைப் பிடித்து, பிஸ்கோத்தும் டீயும் கொண்டுபோய்க் கொடுக்கும்படி சொன்னேன். அப்புறம் ஏதோ சந்தேகம் தோன்றவே இந்திய சிற்றுண்டிச் சாலைக்கும் போய் சிற்றுண்டி, காப்பி கொண்டு போய்க் கொடுக்கும்படியும் சொன்னேன். பிறகு சற்று தூரம் பிளாட்பாரத்தில் நடந்துவிட்டுத் திரும்பினேன். திரும்புகையில் அந்தப் பெண்ணின் வண்டிக்கருகில் நின்று ''டீ வந்ததா?'' என்று கேட்டேன். அவள் திரும்பிப் பார்த்து முகமலர்ச்சியுடன், ''ஓ! ஒன்றுக்கு இரண்டு மடங்காக வந்தது. நீங்கள் கூட வந்து சாப்பிடலாம்!'' என்றாள்.

ஒரு கணம், அந்த வண்டியில் ஏறிக் கொள்ளலாமா என்ற பைத்தியக்கார எண்ணம் உண்டாயிற்று. நல்ல வேளையாக, வண்டியின் வெளிப்புறத்தில் 'பெண்களுக்கு மட்டும்' என்று போட்டிருப்பதைப் பார்த்திருந்தேன். ஆகையால், ''இல்லை! நான் சாப்பிட்டாயிற்று!'' என்று சொல்லிவிட்டு என் வண்டியில் போய் ஏறிக் கொள்வதற்கு நகர்ந்தேன். அந்தப் பெண் மறுபடியும் ''இன்னும் ஓர் உதவி எனக்காகச் செய்ய முடியுமா? இந்த ரயிலில் காக்கி புஷ்கோட் அணிந்த மூன்று மனிதர்கள் எந்த வண்டியிலாவது இருக்கிறார்களா? அவர்களில் ஒருவர் கடற்படையைச் சேர்ந்தவர் மாதிரி தொப்பி அணிந்திருப்பார்! ஆனால்... ஒரு வேளை, வண்டி புறப்படும் சமயம் ஆகிவிட்டதோ, என்னமோ?'' என்றாள்.

''வண்டி புறப்படப் போகிறது! அதனால் பாதகமில்லை. நீங்கள் சொல்வது போன்ற மூன்று ஆசாமிகள் இந்த வண்டியில் இருக்கிறார்கள். என்ஜினுக்குப் பக்கத்து வண்டியில் அவர்கள் இருப்பதைச் சற்று முன்னால் பார்த்தேன்!'' என்றேன். நான் சொன்னது உண்மைதான். அதைக் கேட்ட அந்தப் பெண்ணின் புருவங்கள் வெகு இலேசாக நெரிந்தன. ''சரி, ரொம்ப வந்தனம்'' என்றாள். நான் போய் என் வண்டியில் ஏறிக்கொண்டேன்.

விருதுநகரிலிருந்து மதுரைக்கு ரயில் போனதே எனக்குத் தெரியவில்லை.

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2008**



படைப்பாளிகளுக்கும்...
வாசக எழுத்தாளர்களுக்கும்
மாபெரும் வாய்ப்பு!

**முதல் பரிசு - ரூ.10,000/-**
**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**
**மூன்றாம் பரிசு - ரூ.5,000/-**

**கடைசித் தேதி :**
**ஜூன் 16**

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும். விதிமுறைகள் மற்ற விவரங்களுக்கு 11.05.2008 இதழ் கல்கியைப் பாருங்கள், அல்லது அடுத்த இதழுக்குக் காத்திருங்கள்.

- ஆர்.

அப்படியாக என் மனம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. என்ன சிந்தனை என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா? அந்தப் பெண் யார்? எங்கிருந்து எங்கே போகிறாள்? தனியாகப் பிரயாணம் செய்வதன் காரணம் என்ன? பார்த்தால் நாகரிகமான படித்த பெண்ணாகத் தோன்றுகிறாளே? 'புஷ்கோட்' அணிந்த மூன்று மனிதர்களைப் பற்றி எதற்காக விசாரித்தாள்? என்றெல்லாம் எனக்கு நானே கேள்விகளைப் போட்டுக்கொண்டேன். ஆனால் பதில் ஒன்றும் கிடைக்கவில்லை. எனினும் பொழுது மட்டும் சிறிதும் நில்லாமல் ஒரே ஓட்டமாக ஓடிவிட்டது.

மதுரைச் சந்திப்பு வந்தது. நாட்டில் எத்தனையோ ரயில் நிலையங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒரு தனி உருவமும் இருக்கிறது. மதுரை நிலையம் ஒரு தனி ரகம். நிலையத்துக்குள் ரயில் வரும்போது ஜனங்கள் சுவர் வைத்த மாதிரி வரிசை வரிசையாக நின்று உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பார்கள்.

என்னத்தைத்தான் பார்ப்பார்களோ தெரியாது. வந்த ரயிலில் ஏறுவோர் இறங்குவோர் அதிகம் உண்டா என்றால், அதுவும் இல்லை. மாலை நேரத்தில் பொழுது போகாமல் ரயில் நிலையத்துக்கு வந்து, வருகிற போகிற வண்டிகளைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஜனங்களைப் போலத் தோன்றும். சிறுபிள்ளைகள் சிலர் கையில் கையெழுத்து வாங்கும் சிறிய புத்தகங்களை வைத்துக்கொண்டு ரயிலில் யாராவது பிரமுகர்கள் வருகிறார்களா என்று ஆவலுடன் பார்த்துக்கொண்டு போவார்கள். பத்திரிகை விற்பவர்கள் ஒரு நகரும் பெட்டியில் ஆபாசமான படங்கள் போட்ட மஞ்சள் இலக்கியங்களை வைத்துக்கொண்டு பிரயாணிகள் எதிரே வந்து நின்றுவிடுவார்கள். 'பிக்சர் போஸ்டு வேண்டுமா?' 'இல்லஸ்ட்ரேடட் வீக்லி வேண்டுமா?' என்று கேட்டுக்கொண்டு நிற்பார்கள். வேண்டாம் என்று சொன்னாலும் போகமாட்டார்கள். பெட்டியிலுள்ள ஆபாசப் புத்தகங்களின் மேலட்டையைப் பிரயாணிகள் பார்ப்பதற்காக காத்துக்கொண்டிருப்பார்கள். ஏதாவது ஒரு அட்டையின் மேல் அவர்களுக்கு ஆசை விழாதா என்ற நோக்கம்.

என் முன்னால் அப்படி ஒரு பெட்டி வந்து நின்றதும், 'இதேதடா தொல்லை?' என்று நான் கீழே இறங்கினேன். கூட்டத்தில் முண்டியடித்துக்கொண்டு பிளாட்பாரத்தில் உலாவத் தொடங்கினேன். 'பெண்கள் வண்டி'யில் அந்தப் பெண்ணைக் காணவில்லை. சிறிது ஏமாற்றத்துடன் மேலே நடந்தேன். எஞ்ஜினுக்கு அருகில் பிளாட்பாரத்தில் ஒரு சிறிய கும்பல் நின்றது. யாருக்கோ மாலைபோட்டு வழியனுப்பிக் கொண்டிருந்தார்கள். 'ஹிப் ஹிப் ஹுர்ரே!' என்று கோஷமிட்டார்கள். அதில் என் கவனம் செல்லவில்லை. அந்தக் கும்பலுக்குச் சற்று அப்பால் நான்கு பேர் நின்று

**"நேற்று என்பது இன்று இல்லை. இன்று என்பது நாளை இல்லை. நாளை என்பது நேற்று இல்லை. நேற்றும் நாளையும் இன்று இல்லை. இதிலேயிருந்து என்ன தெரியுது?"**

**"இனிமேலும் நான் இங்கேயிருப்பது நல்லது இல்லை!"**

**- ஜி.சத்யகிரிராஜன்**

பேசிக்கொண்டிருந்த இடத்தில் என் கவனம் சென்றது. அவர்களில் மூன்று பேர் காக்கி 'புஷ்கோட்' ஆசாமிகள், நாலாவது நபர், என்னையறியாமல் என் கண்கள் தேடிக்கொண்டிருந்த பெண். அப்போது அவள் என் பக்கம் பார்க்கவில்லை. தலையில் அணிந்த ஒற்றை ரோஜாவிலிருந்துதான் அவள் என்று தெரிந்துகொண்டேன். அவள் ஏதோ வேடிக்கையாகப் பேசியிருக்க வேண்டும். மற்ற மூன்று பேரும் நகைத்தார்கள். எனக்கு ஒரே எரிச்சலாயிருந்தது. அவர்களிடையே போவதற்கும் தைரியமில்லை. அங்கிருந்து நகர்வதற்கும் மனம் வரவில்லை. அவர்கள் என்ன பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்று அறிந்துகொள்ள

ஆவல் உண்டாயிற்று. நிற்கலாமா நகரலாமா என்று யோசித்துக்கொண்டிருந்த போது அவள் திரும்பினாள். என்னைப் பார்த்துவிட்டாள். உடனே பழையபடி ஒரு முல்லைப் புன்னகை அவள் முகத்தில் பூத்தது. மறுபடி திரும்பி அவர்களுடன் பேசத் தொடங்கினாள். அங்கிருந்து அகல்வதே நலம் என்று தீர்மானித்தேன். திரும்பிப் போய் என் வண்டியில் ஏறிக்கொண்டேன். என்ஜின் இருந்த திக்கையே பார்த்துக்கொண்டிருந்தேன். எதற்காக என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

வண்டி புறப்படும் நேரம் ஆகிவிட்டது. இன்னும் அவள் ஏன் திரும்பி வரவில்லை? அந்தப் 'புஷ்கோட்' மனிதர்களுடன் அவர்களுடைய வண்டியில் ஏறிவிட்டாளா என்ன...? இல்லை, அதோ அவள் வருகிறாள். வேகமாகவே நடந்து வருகிறாள். என்ன அழகான நடை! அவள் நடப்பதாகவே தோன்றவில்லை; மிதப்பதாகத் தோன்றியது. என் வண்டிக்கு அருகில் வந்ததும் என்னைப் பார்த்தாள். சற்றுத் தயங்கி நின்றாள். ''வண்டி புறப்படப் போகிறதே!'' என்றேன். என்னத்தைச் சொல்ல? அவள் சட்டென்று வண்டிக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்தாள். வந்தவள் எனக்கு எதிரில் உட்கார்ந்து என்னை ஏறிட்டுப் பார்த்தாள்.



என் நெஞ்சு அபார வேகமுள்ள விமான என்ஜினைப் போல் அடித்துக்கொண்டது.

''பாருங்கள்! இப்போதெல்லாம் ரயிலில் தனியாகப் பிரயாணம் செய்வது அபாயம் என்று சொல்கிறார்கள்! பெண்கள் வண்டியில் இன்னும் யாராவது பெண்கள் ஏறுவார்கள் என்று பார்த்தேன். ஒருவரும் ஏறவில்லை. ரயிலில் கொலைகூட நடக்கிறது என்று சொல்கிறார்கள். நானும் இந்த வண்டிக்கே வந்துவிடலாமா என்று பார்க்கிறேன். நீங்கள் மதராசுக்குத்தானே போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

எல்லையில்லாத உற்சாகத்துடன் நான், ''ஆமாம், மதராசுக்குத்தான் போகிறேன். நீங்கள் பேஷாக இந்த வண்டிக்கே வரலாம்; சாமான்களைக் கொண்டுவரச் சொல்லட்டுமா? ஏ, போர்ட்டர்!'' என்றேன்.

''இப்போது வேண்டாம்; அடுத்த ஸ்டேஷனில் பார்த்துக்கொள்ளலாம்!'' என்று சொல்லிவிட்டு அந்தப் பெண் இறங்கிச் சென்றாள்.

அவள் இறங்கிய உடனே, யாரோ ஒருவர் சடக்கென்று கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்தார். கையில் ஒரு பிரயாணப் பெட்டியும் வைத்துக்கொண்டிருந்தார். பெட்டியைப் பலகையில் வைத்துவிட்டு என்னையும் போய்க்கொண்டிருந்த பெண்ணையும் இரண்டு மூன்று தடவை மாறி மாறிப் பார்த்தார். தொண்டையைக் கனைத்துக்கொண்டு, ''மன்னிக்க வேண்டும்! ஒரு வேளை இந்த வண்டி ரிஸர்வ் ஆகியிருக்கிறதோ?'' என்றார்.

'ஆமாம்' என்று ஒரு பொய் சொல்லி அவரை இறங்கிப் போகச் சொல்லலாமா என்று என் மனத்தில் ஒரு கெட்ட எண்ணம் உதித்தது.

இதற்குள், கார்டு குழல் ஊதும் சத்தம் கேட்டது. ரயில் புறப்படுவதற்குள் அவள் வண்டியில் ஏறிவிடுகிறாளா என்று எட்டிப் பார்த்தேன். அந்த அழகிய ஒற்றை ரோஜாப்பூ கண்ணைக் கவர்ந்தது. அந்தப் பூவை அணிந்தவள் வண்டியில் ஏறியதும், ரயிலும் நகர்ந்தது.

**(தொடரும்)**

**"பிரதமர், அவர் வேலையைச் செய்கிறார். நாம் கட்சிப் பணி செய்வோம்!"**

கடந்த ஏப்ரல் மாதத்தில் ஒரு நாள். மிகவும் நெருக்க மானவர்களுக்குக்கூட தகவல் கொடுக்காமல், ஹெலிகாப் டரில் உத்தரபிரதேச மாநிலம் சித்திரகூட் பகுதிக்கு விரைந்தார் ராகுல் காந்தி. அங்கு சென்ற தற்குக் காரணம், தேசிய வேலை வாய்ப்பு உறுதித் திட்டம், ஒரு ஊராட்சிக்குட்பட்ட சில கிராமங் களில் சரியாகச் செயல்படுத்தப் படவில்லை என்று ஒரு தன்னார்வ நிறுவனத்திடமிருந்து வந்த புகார் தான். தமக்கு வந்த புகார் உண்மை தான் என்பதைப் புரிந்துகொண்ட ராகுல், திட்டம் செயல்படுத்தப்படாத தற்கு உள்ளூர் காங்கிரஸ் ஊராட்சித் தலைவர் மட்டுமல்லாமல், மாவட்ட நிர்வாகமும் ஒரு காரணம் என்பதை உணர்ந்தார். உடனடியாக ஜான்ஸி யிலுள்ள நிர்வாக அலுவலகத்துக்குச் சென்று, மறியல் செய்து, பிரச்னையைக் கவனிக்குமாறு மனு கொடுத்துவிட்டுச் சென்றார். மறுநாள் மீடியா, ராகுலுக்குப் பெரிய முக்கியத்துவம் கொடுக்க, உத்தர பிரதேச முதல்வர் மாயாவதி கடுப்பாகிப் போனார். 'ராகுல் என்ன இளவரசரா? இது போன்ற ஸ்டன்ட் எல்லாம் உத்தரபிர தேசத்தில் வேண்டாம். இது தொடர்ந்தால், மத்தியில் காங்கிரஸ் கூட்டணி அரசுக்குக் கொடுத்து வரும் ஆதரவை வாபஸ் வாங்கிக்-கொள்வோம்' என்று கர்ஜித்தார்.

உத்தரபிரதேச கிராமங்கள் மட்டுமல்ல; ஒரிஸ்ஸா, கர்நாடகா, மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களிலும் அதிரடி விஸிட் அடித்து அசத்தியிருக்கிறார் ராகுல். 'பாரத் தர்ஷன்' என்ற இந்தப் பயணம் தொடர்கிறது.

'தலித் வீடுகளுக்குப் போனால், உடனே குளிக்கிறார் ராகுல்' என்று அவரை அவதூறா கப் பேசிய மாயாவதியின் குரல் மக்களிடம் எடுபடவில்லை. 'பிரதமர் பதவிக்கான வேட் பாளராக ராகுலைக் கருதுவதில் என்ன தவறு?' என்றார், மூத்த அமைச்சர் அர்ஜுன் சிங். உடனே கருணாநிதி, 'ராகுல் பிரதம ராகத் தேர்வானால் மகிழ்ச்சியடைவேன்' என்றார்!

பாராளுமன்றத்தில் சுதர்சன நாச்சி யப்பன், "ராகுல் காந்தி ஏழைகளின் யுவராஜ்தான். சித்தார்த்தன் புத்தனாக மாறியது போன்று, ராகுல்காந்தி தேசத்துக்குத் தம்மை அர்ப்பணித் துக் கொண்டு செயல்படுகிறார்" என்றார்.



# சுமக்க

'யுவராஜ்' பேச்சு ராகுல் மனத்தைக் கொஞ்சம் ஆழமாகத் தைத்துவிட்டது. "இங்கு என்ன மன்னராட்சியா நடக்கிறது? யுவராஜ் என்று சொல்வது என்னைக் காயப் படுத்துவது மட்டுமல்லாமல், அருவருப் பாகவும் இருக்கிறது" என்று பொங்கினார் ராகுல். "பிரதமர், அவர் வேலையைச் செய்கிறார்; நாம் கட்சிப் பணியைக் கவனமுடன் செய்வோம்" என்றார்.

2004 பாராளுமன்றத் தேர்தலில் அமேதி தொகுதியில் வேட்பாளராக நின்று வாகை சூடினார். கொஞ்சம் கொஞ்சமாக, கட்சியில்

ராகுலின் முக்கியத்துவம் உணரப்பட்டது. 2007ல் காங்கிரஸ் கட்சியில் பொதுச் செயலாளராகவும், காரியக் கமிட்டியின் உறுப்பினராகவும் நியமிக்கப்பட்டார். குறிப்பாக இளைஞர் காங்கிரஸ் அவர் பொறுப்பில் விடப்பட்டது.

''தெளிவான ஒரு பார்வையோடு களத்தில் குதித்திருக்கிறார் ராகுல்'' என்கிறார் சுதர்சன நாச்சியப்பன்.

''எதிர்கால ''இளைய தலைமுறையை ஆற்றல், அதிகாரம் மிக்கதாக மாற்றுவதே அவர் குறிக்கோள். மக்களோடு மக்களாக இணைந்து அவர்கள் பிரச்னைகளுக்குப் போராடி, அரசின் திட்டங்கள் அனைத்தும் கடைக்கோடி மனிதனுக்கும் சேர வேண்டும் என்ற நோக்கிலேயே அவர் பணி அமைந்திருக்கிறது. கிராமத்து மக்கள் வாழ வழியின்றி நகரத்துக்குக் குடிபெயர்வதைத் தடுத்து, கிராமங்களை நகரங்களுக்கு ஈடாக மாற்றிக் காட்ட வேண்டும் என்ற கனவுகளுடன் இறங்கியிருக்கிறார்.''

''அரசியலுக்கு யார் வேண்டுமானாலும் வரலாம், போகலாம். ஆனால், காங்கிரஸில் ராகுலைவிட அனுபவம் மற்றும் திறமை வாய்ந்த மூத்த தலைவர்கள் இருக்கிறார்கள். அப்படி இருந்தும் அவர்

# விரும்பாத பாரம்!

களுக்குக் கொடுக்கப்படாத முக்கியத்துவம் ராகுலுக்குக் கொடுக்கப்படுவது காங்கிரஸின் கொத்தடிமை மனோபாவத்தையே காட்டுகிறது. மேலும் ராகுலால் காங்கிரஸுக்கு எந்த லாபமும் இல்லை. இது குஜராத் தேர்தல் மூலம் நிரூபணம் ஆகிவிட்டது'' என்கிறார், தமிழக பா.ஜ.க. பொதுச் செயலாளர் எச்.ராஜா.

''ராகுல் அதிகாரப் பொறுப்பில் இல்லை. கட்சி தொடர்பான பணிகளில் இறங்கியிருக்கிறார். இதில் கருத்துச் சொல்ல என்ன இருக்கிறது? மாயாவதி கொதிக்கிறார் என்றால், அவரது செல்வாக்குக்கு ஆபத்து என்பதை உணர்கிறார். மற்றபடி, வாரிசு என்பதெல்லாம் விமர்சனம் செய்யலாம்... முடிவு செய்யப்போவது மக்களே'' என்கிறார் மூத்த கம்யூனிஸ்ட் தலைவர் ஒருவர்.

''நாடு முழுக்க இருக்கும் முக்கியமான தன்னார்வ அமைப்புகளுடன் நேரடித் தொடர்பில் இருக்கிறார் ராகுல். இந்தியாவின் அனைத்து மாவட்டங்களைப் பற்றிய சகல விவரங்களும் அவரது அலுவலக கம்ப்யூட்டரில் நிரப்பி வைக்கப்பட்டிருக்கின்றன. இதுதவிர, மத்திய அரசின் மக்கள் நலத் திட்டங்கள், அவற்றுக்கு ஒன்றிய வாரியாக ஒதுக்கப்பட்ட தொகை, செலவழித்த விவரம், அதற்கான பணிகள் என்று விரல் நுனியில் தட்டித் தெரிந்துகொள்கிறார் ராகுல். இப்போது அவர் பல மாநிலங்களில் சுற்றுப் பயணம் செய்வதன் முக்கிய நோக்கம், தேசிய வேலை வாய்ப்பு உறுதித் திட்டம் சரியாகச் செயல்படுத்தப்படுகிறதா என்பதைப் பார்ப்பதுதான்'' என்கிறார் ராகுலுக்கு நெருக்கத்தில் உள்ள பிரமுகர் ஒருவர்.

இதற்கிடையில் அகிலேஷ் தாஸ் என்ற உத்தரபிரதேச சீனியர் பிரமுகர், ''ராகுலைச் சுற்றி ஒரு குழு செயல்படுகிறது. அவர்கள் காங்கிரஸ்காரர்கள் அல்ல. அவர்கள்தான் கட்சியை ஆட்டிப் படைக்கிறார்கள்'' என்று அதிரடியாகச் சொல்லி, கட்சியிலிருந்து விலகியிருக்கிறார்!

சில தனிப்பட்ட காரணங்களால்தான் அகிலேஷ் தாஸ், அபாண்டமாகக் குற்றச்சாட்டு சொல்லி விலகியிருப்பதாக காங்கிரஸ் கட்சி பதிலடி கொடுத்திருக்கிறது. ''கட்சி பலமிழந்து போவதற்குக் காரணம், நியமனத் தலைவர்களும் கோஷ்டி மோதல்களும்தான். அடிமட்டத்திலிருந்து கட்சிக்குள் தேர்தல் நடத்தி, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டால், கோஷ்டிகளும் ஒழியும்... கட்சியும் வளரும். இதைச் செய்வதற்கான துணிவு ராகுலிடம் மட்டுமே இருக்கிறது. ஆனால், அவருக்கு வழங்கப்பட்டிருக்கும் கட்சியின் பொதுச் செயலாளர் பதவிக்குரிய பொறுப்போடு, மனமுவந்து ஏற்க முன் வந்தால் மட்டுமே இது சாத்தியம்'' என்கிறார் தமிழக காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

- ப்ரியன்



புத்தம்புது சந்தனம் கொடுக்கணும் - திருப்
பூந்துருத்தி வெத்தல வைக்கணும்
புஷ்பவனம் பாட்டும் கேக்கணும் - அவரு
பொஞ்சாதியும் சேந்து பாடணும்!
மாசி மாதம் பொறந்திடலாச்சு - இந்த
மாமனுக்குக் கல்யாணப் பேச்சு
ஊருக்கெல்லாம் பாக்கு வச்சு - நாம
ஒண்ணுசேரும் காலம் வந்தாச்சு!

நெருங்கிய உறவுகளுக்கிடையில் ஏற்படும் சிறு பிரிவு, அவர்களுக்குள் ஒளிந்திருக்கும் அன்பை வெளிக் கொணரும். முழுமையாக ஒரு பத்து நாட்கள் அவரைப் பிரிந்திருந்தபோது தான், அவர் மீதான என் நேசத்தைப் புரிந்துகொள்ள முடிந்தது. என்னுடைய எதிர்காலம் எப்படி இருக்கப் போகிறது என்பது குறித்துச் சிந்தித்துப் பார்த்தேன். பாட்டுதான் எல்லாமே என்று கருதி, இசையில் முது கலைப் பட்டமும் பெற்றோம். இனி, வேறு யாரையாவது மணம் செய்துகொண்டால் தொடர்ந்து பாட முடியுமா? இசையைத் துறந்து ஒரு வாழ்க்கை வாழ முடியுமா? என்றெல்லாம் சிந்தித்தேன். இவரையே என் வாழ்க்கைத் துணையாக ஏற்க முடிவு செய்தேன்.

என்னுடைய ஆசை என்னவென்றால், பாடணும், தொடர்ந்து பாடிக்கொண்டே இருக்க வேண்டும். சராசரியான ஓர் இந்தியப் பெண் போலவே தான் திருமணத்துக்குப் பின்பு காதலிக்கவும் கடமையாற்றவும் தயாராக இருந்தேன். எங்கள் குடும்பத்தார்களுக்கு இதில் விருப்பம் இல்லை. தகுதி யான ஆளைத் தேர்ந்தெடுக்கவில்லையோ என்னும் இயல்பான பயம் அவர்களுக்கிருந்தது. 'நீங்கள் பார்த்து வைக்கும் மாப்பிள்ளையோடு வாழாமல் திரும்பி வந்துவிட்டால் என்ன செய்வீர்கள்?' என்று ஒரு கேள்வியெழுப் பினேன். என் தாத்தா ஒரு பழமைவாதி; பிடிவாதக்காரர். ஆனால், அவர்தான் இந்தத் திருமணத்தை நடத்தி வைத்தார். விடிய விடிய யோசித்தவர், பிறகு தீர்மானமாகச் சொல்லிவிட்டார். 'அந்தப் பையனுக்கே கொடுக்கப்போகிறேன். யாரும் மறுப்பு தெரிவிக்கக்கூடாது' என்றார். எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. எங்கள் திருமணம் 1992 செப்டெம்பர் 10ல் இலங்க வழக்கப்படி வேதாரண் யத்தில் நடந்தது. சென்னையில் வரவேற்பு வைத்திருந்தோம். இருவரும் சொந்தமாக உழைத்துச் சம்பாதித்த பணத்தில்தான் தனிக்குடித்தனம் செய்ய வேண்டும் என்று

# காதல் கோடு!

# சரப்ஜித்சிங் மனைவிக்கு சல்யூட்

போட்டி முடிவு

கல்கி (6.4.2008) 'சரப்ஜித்சிங் மனைவிக்கு சல்யூட்' போட்டிக்கு, வாசகர்கள் போட்டி போட்டுக்கொண்டு 'நச்' வாசகங்களை அனுப்பிக் குவித்துவிட்டார்கள். அதில் கல்கி ஆசிரியர் குழு தேர்ந்தெடுத்த நான்கு சூப்பர் பஞ்ச்கள்:

வீரத்தின் விளைநிலம்; விவேகத்தின் பொன்மனம்.

- சிவ.தீபலட்சுமி, செஞ்சி

நாட்டிடம் பெண் கேட்டது 33%; பெண் நாட்டுக்குத் தந்ததோ 100%

- பாலு, நாமக்கல்

சுயநல அரசியலைச் சுட்டாய்; நாட்டுணர்வால் இமயம் தொட்டாய்!

- குமரி அமுதன், சென்னை

இந்திய தேசிய மாதாவுக்கு இனி சுக்பிரீத் கவுர் என்றுதான் பெயர்.

- அ.ரா.வலம்புரி நாகராஜன், ஈரோடு

முடிவெடுத்தோம். விளைவு? நிறையவே கஷ்டப்பட்டோம்.

பொங்கல் திருநாள் நிகழ்ச்சிக்கு சென்னைத் தொலைக்காட்சி நிலையத்தில் யு.எம்.கண்ணன் அவர்கள் ஒரு வாய்ப்பு கொடுத்தார். அந்த நிகழ்ச்சி எங்கள் வாழ்க்கைக்கு ஓர் ஏணியாக அமைந்தது. பத்திரிகை ஊடகங்கள் எங்கள் வளர்ச்சிக்கு மிகவும் துணையாக நின்றன. கல்கி, குமுதம், ஆனந்த விகடன் எல்லாம் எழுதி எங்களைப் பிரபலப்படுத்தின. பகலெல்லாம் பயணம்; இரவெல்லாம் கச்சேரி. இன்று ஓர் ஊர், மறுநாள் இன்னோர் ஊர் என்று கடுமையாக உழைத்தோம். கொஞ்சம் காசு சேர்ந்தது. மைலாப்பூர் மகாலக்ஷ்மி அபார்ட்மென்டில் வீடு கொடுக்க மாட்டோம் என்று சொன்னார்கள். நாங்கள் கணவன்-மனைவி என்றால் நம்ப மறுத்தார்கள். அந்த நேரத்தில் பவானி அம்மாதான் வீடு கொடுத்து உதவினார்கள்.

மண்ணெண்ணெய் ஸ்டவ்தான் வைத்திருந்



## புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி

தோம். நெருப்பு எரிந்து கொண்டிருக்கும் போதே என்னெமையை ஊற்றிவிட்டேன். குப்பென்று பற்றிக்கொள்ள, கையில மட்டும் சின்னக் காயம். மற்றபடி வேறு ஆபத்தின்றித் தப்பித்தேன். அதனால், பெண்ணைக் கொடுமைப்படுத்துகிறார் என்று சொல்லிவிடுவார்களோ என்று பயந்தார். எரிவாயு இணைப்பு வேண்டி அழைத்தார். அச்சமயம் இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் எரிபொருள் சேமிப்புக்கான விழிப்புணர்வு பிரசாரம் செய்தார்கள். அந்தப் பிரசாரத்தில் நாங்களும் கலந்து கொண்டு பாடினோம். இவர்தான் அந்தப் பாடலை எழுதி இசைத்தார்.

*பட்டுப் புடவை வேணும் மாமா*
*இளம்புங்க - சும்மா*
*பறந்துபோகும் ஸ்கூட்டரத்தான்*
*இளப்புங்க!*
*பட்டுப் புடவைதான் வாங்கித் தாரேன்*
*வாயேண்டி*
*பஸ்ஸாலதான் போய் வருவோம்*
*வாயேண்டி!*

அந்தப் பாடலுக்காகப் பாராட்டி எரிவாயு இணைப்பு தருவதாக உறுதியளித்தார்கள்; அதன்படியே கொடுத்தார்கள்.

1995ல் முதல் குழந்தை பல்லவி பிறந்தாள். மேடையில் குழந்தையை உறங்க வைத்துவிட்டுப் பாடுவேன். கர்ப்பமாக இருந்த காலத்திலும் சரி, கைக்குழந்தைக் காரியாக இருந்தபோதும் சரி, நிறைய சிரமப்பட்டேன்.



"என் தாய் மாமனையே நான் கல்யாணம் பண்ணிக்கிட்டேன்!"

"Toy மாமனாக்கிட்டியா?"

**- வீ.விஷ்ணுகுமார்**

திருமணக் கச்சேரிகளில் மங்கலகரமாக இருக்க வேண்டும் என்று நிறைய பாடல்கள் எழுதினார். பாடல்கள் எங்களுடைய சொந்த வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக எல்லோரும் சொல்வார்கள். கல்யாணக் கச்சேரி களைகட்டும்.

*வாங்க மாமா ஆச மாமா*
*வாங்க வாமா பூமாலே!*
*ஏங்க மாமா ஏங்க வாமா*
*எழுதவாமா சீரோலே!*
*ஊருக் கெல்லாம் சேதி*
*சொல்லி*
*உனக்கு மால நான்*
*போடுறேன்*
*உருப்படியா நாலு காசு*
*சேர்த்துமே ஓடி வாரேன்!*

அதேபோல் சமுதாயப் பாடல்களும் எழுதச் சொன்னேன். ஆண், பெண் சமத்துவம், மதுவிலக்கு போன்ற பாடல்கள் உணர்வுபூர்வமாக இருக்கும்.

முதலில் வெளியூர்களில்தான் கச்சேரிகள் கிடைத்தன. இப்போது சென்னையில் நிறைய வாய்ப்புகள் வருகின்றன. சிங்கப்பூர் கச்சேரிக்கு நல்ல வரவேற்பு இருந்தது.

இதுவரை எனக்கு எந்த அரசு விருதும் கிடைக்கவில்லை. 'இரண்டு பேரும் சேர்ந்துதானே பாடுகிறீர்கள், ஏன் உங்களுக்குக் கொடுக்கவில்லை?' என்று நிறையபேர் ஆதங்கப்பட்டார்கள். ஒருவேளை நான் வடநாட்டுப் பெண் என்பதனால், மறுக்கப்படுவதாக இருக்கலாம். டெல்லி தமிழ்ச் சங்கத்தினரால் 'எழுச்சி தமிழிசை நாயகி' விருதும், தந்தை பெரியார் தமிழிசை மன்றத்தினரால் 'தமிழிசைப் பாணர்' விருதும் கொடுக்கப் பெற்றேன். மகிழ்ச்சி நிறைந்த அனுபவம் அது.

***(அடுத்தவாரம் புஷ்பவனம் குப்புசாமி)***

# மனசின் ஞான ஒளி!

த.கி.நீலகண்டன்

கோயிலில் விளக்கேற்றி வைப்பதையே ஒரு தொண்டாகச் செய்து வந்த சில அடியார்களின் வரலாற்றை, பெரிய புராணம் பேசுகிறது. எண்ணெய் வாங்க காசு இல்லாதபோது ஒருவர் தண்ணீரால் விளக்கெரிக்கிறார்! ஒருவர் தம் ரத்தத்தையே வடித்து எண்ணெயாக வார்க்கிறார்! இன்னொருவர் தம் தலை முடியையே கத்தரித்து திரியாக இட்டு விளக்கேற்றினாராம்! இவர்களுக்கு எல்லாம் முன்னுதாரணமாகத் திகழ்ந்தது ஓர் எலி!

அந்த எலி வேதாரண்யம் கோயில் விளக்கில் இருந்த எண்ணெயைக் குடிப்பதற்கு முயற்சி செய்தது. பாவம், அதற்கு அன்று வேறு எந்த உணவும் கிடைக்கவில்லை! எலியின் மூக்கு நுனிபட்டதும் அணையும் தறுவாயில் இருந்த விளக்கின் திரி தூண்டப்பட்டு, இன்னும் சிறிது நேரம் பிரகாசமாக எரிந்ததாம். எலி பயந்து ஓடிவிட்டது. அணைய இருந்த விளக்கைத் தூண்டிவிட்டதால், சிவாலயத்தில் விளக்கை ஏற்றி வைத்த புண்ணியம் அந்த எலிக்குக் கிடைத்ததாம்! அந்தப் புண்ணியவசத்தால் அடுத்த பிறவியில் அந்த எலி அசுரகுலத்தில் மகாபலிச் சக்ரவர்த்தியாகப் பிறந்து, இந்திரனுடைய பதவிக்கே வேட்டு வைத்ததாம்! மற்ற அசுரர்கள் எல்லோரும் மகாவிஷ்ணுவால் வதம் செய்யப்பட்டிருக்க, மகாபலி மட்டும் சிரஞ்சீவித்தன்மை பெற்று பாதாள லோகத்தில் இன்னமும் வாழ்ந்து கொண்டிருக்கிறானாம்! அணைய இருந்த விளக்கைத் தூண்டியதற்கே இந்தப் புண்ணிய பலன் என்றால், விளக்கில்லாத கோயிலில் விளக்கேற்றி வைத்தால் எவ்வளவு புண்ணியம்!

கோயில்களில் விளக்கேற்றுவது, ஒளி தருவதற்கான ஏற்பாடாக மட்டுமல்லாமல் நம்முடைய கலைப் பண்பையும் வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. எத்தனை வகைவகையான விளக்குகள்! பாரம்பரியம், கலையழகு, கற்பனைத் திறம் இவை அத்தனையையும், ஒருங்கே பிரதிபலிக்கின்றன விளக்குகள். அவை நம் கலாசாரத்தோடு ஒன்றிவிட்ட ஓர் அங்கமாகிவிட்டன. திருவண்ணாமலை, சபரிமலை



போன்ற கோயில்கள் கார்த்திகை விளக்கு, மகர விளக்கு என்று தீபத்தை முன்னிலைப்படுத்தியே விழாக்கோலம் பூணுகின்றன. பல கோயில்களில் லட்சதீபப் பெருவிழாவும் நடைபெறுகிறது.

நம் கலாசாரத்தில் நல்லது பொல்லாதது எல்லாவற்றுக்குமே விளக்குதான் சாட்சி! புண்ணியவான் யாராவது காலமாகிவிட்டால் அவர் நினைவாகக் கோயில் கோபுரத்தின் மீது மோட்ச தீபம் ஏற்றி வைப்பதும் வழக்கம்.

**வி**ளக்குகளில்தான் எத்தனை விதம்! எவ்வளவு கற்பனை! ஒற்றைத் தண்டின் உச்சியில் சுடர்விடும் ஐந்து முகம் கொண்ட குத்துவிளக்கில் அன்னம், மயில், லக்ஷ்மி, சங்கு, சக்கரம் என பற்பல வடிவங்கள். ஒரு தண்டில் இருந்து இருபுறமும் கிளை பிரிந்து மூன்று, ஐந்து என்று விரியும் கிளை விளக்குகள், கேரளாவில் பிரசித்தம். மரத்தில் தொற்றிப் படர்ந்த கொடிபோல் பின்னிப் பிணைந்து, கூடிப் பிரிந்து, வளைந்து நெளிந்து விரியும் கொடி விளக்கு. அடுக்கடுக்காய்த் தொங்கும் சரவிளக்கு, எந்நேரமும் எரிந்து கொண்டிருக்கும் தூங்காவிளக்கு, சொட்டுச் சொட்டாக எண்ணெய் விழும் தூண்டா விளக்கு, வாயிற்புறங்களை அலங்கரிக்கும் தோரண விளக்கு என்று அடுக்கிக்கொண்டே போகலாம்.



சர்வாலங்கார பூஷிதையாய் பெண் ஒருத்தி கையில் விளக்கேற்றி நிற்பது போன்று பாவை விளக்கு. எனக்குத் தெரிந்து தென்னாட்டில் உள்ளது போன்ற பாவை விளக்குகள் வேறு எங்கும் இல்லை! தமிழகத்தின் ஆபரண கலைக்கு ஓர் எடுத்துக்காட்டு இந்த விளக்குகள். அந்தப் பெண் அணிந்திருக்கும் நகைகளை ஒரு நீண்ட பட்டியலே போடலாம். சில வகை நகைகளுக்கு இன்று பெயர்கூட தெரியாது! அடேயப்பா, உச்சி முதல் கால் விரல்கள் வரை, எத்தனை எத்தனை வகையான நகைகள்! அவள் தோளில் ஒய்யாரமாக ஒரு கிளி. செல்வச் செழிப்பின் அடையாளமாக இந்தப் பாவை விளக்குகள். எளிமைக்கு வடிவாக அமைந்தவை மண்ணால் செய்த அகல்விளக்குகள்.

இந்த உலகமே மண் அகலாகவும் கடல் நீரே அதில் ஊற்றும் நெய்யாகவும் சூரியனே இந்த அகல் விளக்கின் சுடராகவும் கண்டு பாடுகிறார் ஒரு ஆழ்வார். இன்னொரு ஆழ்வார் ஒரு படி மேலே போய்,

*"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புருகு சிந்தை இடுதிரியா -*
*நன்புருகி*
*ஞானத் தமிழ் விளக்கு ஏற்றினேன்"*

என்கிறார்.



புற ஒளியைப் பெருக்கும் வேலையை இன்று மின் விளக்குகள் செய்கின்றன. ஆனாலும் இந்த அகல் விளக்குகளின் அமைதியான ஒளிக்கு ஈடாகுமா? ஆதாயம் கருதாது, அரியல் புகாது ஏற்றப்படும் ஒரு அகல் விளக்கு, ஏழேழ் பிறவிக்கும் நம்மை ஈடேற்றுவிக்கும்!

நன்றி : பூசை ச. அருணவசந்தனின் 'சிவமஞ்சரி' 8ஆம் பாகம்

தமிழகத்தின்
ஆபரணக் கலைக்கு
எடுத்துக்காட்டாக
பாவை விளக்குகள்
திகழ்கின்றன!



# பாவை விளக்கு

